உ

குமரன்றுணை.

ஈழமண்டலத்தில்
திருவானைக்கோட்டைமூத்தநயினார்குளக்கரையில்
எழுந்தருளியிருக்கும்

# சுப்பிரமணியர்கோவை.

இஃது
மேற்படிகடவுளைப்பாரம்பரையாகவணங்கிவருகிறவராகவும்
கொழும்பில்வாசராகவும்
சிவகுருநாதமுதலியாரவர்கள்புத்திரராகவும்
விளங்காநின்ற

**ம௱௱ நமசிவாயமுதலியாரவர்கள்**

கேட்டுக்கொண்டதால்
இந்தக்கோவைப்பிரபந்தத்தில்
சிலதுகவிகளில்
நமசிவாயமுதலியாரவர்கள்தொழுங்குமரனென்றும்
அவர்களுக்குக்கிருபைசெய்யுஞ்சுவாமியென்றும்
அமைத்து
திருவிதாங்கோடுசமஸ்தானாதிபதியாகிய
ஸ்ரீபத்மநாபதாஸ்
வஞ்சிபாலராமவற்மகுலசேகரகிரீடபதி
பாக்யோதய ராம்ராஜா பாதுர்மன்னேசுல்த்தான்
**மகாராஜராஜ ஷம்ஷேர்ஜங் அவர்கள்**
சமுகத்திலிருக்கும்

**௱-குட்டிக்கவிராசரவர்கள்**

சகோதரர்
வீரவாகுபிள்ளையவர்கள்புத்திரராகிய

**வடிவேலுப்பிள்ளையவர்களால்**

இயற்றியதை
திருநெல்வேலிச்சங்கத்தில்த்தலைமைப்புலமைநடாத்தும்
மகாவித்துவான்
**சாலிவாடீசுரஓதுவாமூர்த்தியவர்கள்**
முன்னிலையிற்பரிசோதித்து

திருநெல்வேலி
முத்தமிழாகரவச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டது.
௧௮௭௧ம் ௵

இவ்வச்சுக்கூடத்து

கண்ட்டிருக்ட்டரவர்கள்

மாசித்தாசில்

ஜீவணருயரவர்கள் அன்கோ.

உ

திருநெல்வேலிச்சங்கத்தில்

முத்தமிழ்த்தலைமைப்புலமைநடாத்தும்

**மகாவித்துவான்**

# சாலிவாடீசுரஓதுவாமூர்த்தியவர்கள்.

## இயற்றிய

நிலமண்டிலவாசிரியப்பா.

திருமணிநாகமுமொருமணிநாகமும்
அருமையிற்சுமந்தவிருநிலமடந்தை
தன்னகத்தமைந்தவெண்ணிலவளனும்
வாழுதற்கிடமாமீழமண்டலத்துப்
புனைந்தகுன்றிதுவெனவனைந்தமாளிகைமேல்
சந்திரவதனச்சுந்தரமடந்தையர்
பாலர்மகிழத்தாலாட்டுதலை
விண்ணரம்பையர்கள்பண்ணின்விரும்பி
யியந்திரத்திறங்கிநயம்பெறக்கேட்கும்
பானற்கோடுசேரானைக்கோட்டையிற்
காத்தருள்புரியுமூத்தநயினார்
குளக்கரைமேவியவளக்கொழுக்கருணைக்
கந்தன்காங்கையன்விந்தமடக்கிய
குறுமுனிக்கருளியவறுமுகனஃதான்று
காமனைக்காய்ந்துசோமனைவேய்ந்த
பரமனுக்கறியக்குருமொழிவிரித்தவன்
சூர்முதலசுரர்வேர்கெடத்தடிந்தவன்
என்றுமாலயன்முதற்றுன்றுதேவர்கள்
வழிபடக்கண்டுமிழிகுலவாழ்க்கையில்
உறுகுறவள்ளிசிறுநகைவிருப்புற்
றுனதுகுற்றேவலெனதிடமருளெனப்
பழிமொழிநாணுதுழிதொறுஞ்சென்றவள்
பணிமொழிக்குருகியவணிகெழுதிறலோன்
பேதையேனகத்திலேதமுற்றுணரா
தென்றுங்குடிகொண்டொன்றியவினைதீர்த்
தருளியவேட்கொருபொருளியல்கோவை
பாடுகவென்றுநீடுநிதிபெருகும்
கொழும்புதுக்காவுயர்கொழும்பினில்வாழும்
சிவகுருநாதன்றவமுயற்சியினால்

வந்துவாழ்சற்குணனிந்தமாநிலத்திற் *
றண்ணளிப்பார்வையுண்ணளியரும்பா *
நகைமுகமோனண்முகையவிழ்மலரா *
இனியவைகூறல்கனியவைகாயாப் *
பருவநாடாப்பொருவருங்கொடையே *
யைம்புலநுகருஞ்செம்பழமாக்கொள் *
கற்பகஞ்சேர்ந்தபொற்புறுகற்பகம் *
இல்லறத்திருந்துநல்லறம்புரிந்து *
சிரமமுறுநடைப்பிரமசரியர் *
முதலியபதின்மர்க்குதவியோம்புவ *
தன்றியுமுலகிற்பொன்றுவதின்றிச் *
சொன்மணம்பொருண்மிகுநன்மணமுறுங்கவி *
நயனுறுமுடம்புசெய்தயனிலுஞ்சிறந்த *
புலவர்கடமக்குக்குலதனமாகிய *
நேயநமசிவாயவள்ளல் *
வேண்டுவவேண்டுவகொடுத்துவேண்ட *
வைந்திலக்கணப்படிமுந்துறுதஞ்சை *
வாணன்கோவையேனுறுகருத்தும் *
தேர்ந்துதேர்ந்துகூர்ந்துபாடினன் *
முத்தமிழ்வேந்தருளித்தலத்தின்றும் *
முடிபுனைந்தரசுசெய்படிபுகழ்கேரள *
மன்னர்மன்னன்மன்னுயிர்யாவையும் *
பன்னுவதறிந்துமுன்னருட்செங்கோல் *
செலுத்திக்கலியைத்தொலைத்தபெருமான் *
அன்னதானமுஞ்சொன்னதானமும் *
கனவிலுமறவாதுதினமுங்கொடுத்திடும் *
சேரர்பிரான்றன்பேரவைதன்னிற் *
பலபலகல்வியிலகுறச்செய்யும் *
குட்டிக்கவிமனிட்டசகோதர *
வீரவாகுதிரனுதவிய *
புத்திரனுத்தியாற்சித்திரக்கவிமுத *
லெத்திறக்கவியுஞ்சுத்தமாச்செய்பவன் *
இலக்கணவிலக்கியங்கலக்கறக்கற்றோன் *
சீருஞ்செல்வமும்பேருஞ்சிறந்த *
வடிவேலெனச்சொல்லிடுநாவலனே. *

திருநெல்வேலி

அம்பலவாணன்கவிராசரவர்கள்பௌத்திரரும்

முத்துக்குமாரசுவாமிகவிராசரவர்கள்புத்திரருமாகிய

## அம்பலவாணன் கவிராசரவர்களியற்றிய

ஆசிரியவிருத்தம்.

திங்கண்மும்மாரிபெய்தங்கண்மாஞாலமாந்தெரிவைக்கோர்திலகமாகித் *
திகழீழதேயத்திலானைக்கோட்டைப்பதிச்சீர்பெருகுமூத்தநயினார் [ல்]
சேர்குளக்கணையில்வாழ்பேரருட்டொண்டர்பாற்செய்யுவேற்குமரவேண்மே
தெள்ளிதினகப்பொருட்கோவையென்றிடுசெய்யுட்செவ்விதிற்பாடுகென்ன
மங்கலமுறுங்கொழும்பார்ந்தசிவகுருநாதவள்ளலருள்பாலனெழிலின்[ன்]
மாரனொண்காரனையவண்கையனகூர்மைகொண்மதியினிற்றுதிகொள்சேட
மகிதலம்புகழ்பொருளில்வடதிசைத்தலைவனின்மதுவுண்டுமதுகரங்கண் *
வரிபாடுகுவளையந்தாரினான்மாமேருவளையதிண்மைப்புயத்தான் *
பங்கயச்சுமுகனன்னமசிவாயப்பெயர்படைத்தமால்பகரவஞ்சிப் *
பாராளுமன்னவன்சீரார்பொன்மன்றினிற்பரிவொடும்புரியுநடனப் *
பாதச்சிலம்பினொலிநாடொறுஞ்சிவபூசைபத்தியிற்செய்யும்வேலை *
பண்பினிற்கேட்குமருள்பெற்றவனவிப்பிராகன்பருகவனமோடுதனமும் *
புங்கமுறநல்குசேரலர்காவலன்றனவைபுகழ்வினோதங்களினிதிற் *
புதிதுபுதிதாச்செய்குட்டிக்கவிமன்சோதரப்பொற்பாகும்வீரவாகு *
புண்ணியப்புதல்வன்வடி வேற்கவிமன்சொற்சுவை பொருட்சுவையொடும்
பொருந்தப்,புத்தமுதமொக்கநாவலரெலாமெச்சப்புகன்றனன்புவிபுகழவே.

---

இஃது

திருநெல்வேலிமகாவித்துவான்

சாலிவாடீசுரஓதுவாமூர்த்தியவர்கள்

மாணாக்கர்

## புதூர் - வள்ளிநாயகம்பிள்ளையவர்கள்

இயற்றிய

கட்டளைக்கலித்துறை.

சீரானைக்கோட்டைத்துவசத்தினான்றருசேய்கடப்பந் *
தாரானைக்கோட்டைத்தரித்தான்மருகன்றனமிரண்டுங் *
கூரானைக்கோடடைநிகராங்குறத்திகொழுநனெனும் *
ஏரானைக்கோட்டைவடிவேலன்கோவைக்கிணையில்லையே. *

விஜயநாராயணம்பண்ணையார்
## வடிவழகியநம்பிமாத்தாண்டப்பிள்ளையவர்களியற்றிய
ஆசிரியவிருத்தம்.

தலமெலாம்புகழுமதிவளமேவுமீழமண் *
டலமதிற்றலைமையான *
தடமெலாம்பணிலங்கள்வயலெலாமணிகடண் *
டலையெலாங்கனிகளீட்டம் *
தளையெலாம்பொன்பெண்கள்குலமெலாமின்னவர்க *
டனமெலாங்கனகமேரு *
தமிழெலாமறிவராடவரெலா மினமுமமற் *
புதமெலாமிகவும்வாய்ந்து *
நலமெலாமோங்குதிருவாலைக்கோட்டையின்மூத்த *
நயினார்குளக்கரைதனில் *
நவமணிகுயிற்றியொளிர்தமனியவிமானத்தி *
னடுவுட்கலாபமயின்மேல் *
நாரணன்முதற்சகலதேவருந்தொழவள்ளி *
நாயகிதெய்வானையுடனே *
நற்கொலுவிருந்தடியவர்க்கருள்செய்குமரன்மே *
னவிலின்பநூலொன்றெனப் *
பலமெலாங்கனமெலாநிலமெலாம்புகழெலாம் *
பணமெலாம்பாக்கியமெலாம் *
பண்பெலாங்கொடையெலாம்பெற்றுவளர்யோகவான் *
பகருங்கொழும்பில்வாசன் *
பைங்குவளைமாலையான்மேழிப்பதாகையான் *
பாவலர்தவங்கள்போல்வான் *
பருவமுகிலொத்தசிவகுருநாதனீன்றபூ *
பதிநமசிவாயவள்ளல் *
கலமெலாங்கவிமன்னர்குலமெலாம்போற்றநற் *
கனகமொடுவரிசைகளெலாம் *
கனிவாகநல்கிவினவினருகவஞ்சிநகர் *
கனமேவவரசுபுரியும் *
காவலன்றிவ்யசமுகத்தில்வளர்குட்டிக் *
கவிஞசோதரனதிகுலக் *
கனவீரவாகின்றவடிவேல்சிறப்புறக் *
கழறினன்கோவைமாதோ. *

இஃது
ஆழ்வார்திருநகரி
சுவாமி-ஆதிநாதர் ஆழ்வார் சன்னிதானத்தில்
திருமஞ்சனக்கவிபாடிவருகிற
வாணிளவரசுகவிராஜரவர்கள்
புத்திரர்

# இராமாநுசன்கவிராஜரவர்கள்

இயற்றிய

## ஆசிரியவிருத்தம்.

---

நீர்மேவுசெஞ்சடைக்கட்வுள்வாழ்வெள்ளிவரை *
நேர்திருக்கோணசலம் *
நிறைகருணைவளர்திருக்கேதீச்சரமின்னு *
நிகரில்சிவதலமனேகம் *
நிலைகொண்டுதிகழீழமண்டலத்திற்பெருமை *
நிறைதனதன்வாழ்நகரமும் *
நிதிதங்குசசிகேழ்வனரசுசெயுங்கரமு *
நிகரோவெனச்சொல்வளமும் *
ஏர்கொண்டசெந்நெலும்வார்கொண்டகன்னலு *
மிளையார்கள்பந்துபயிலும் *
இலகுமணிமேடையுமவருலவுமோடையு *
மெழில்கொள்சொன்னத்துவசமும் *
இனியவனசாலையுங்கனிகண்மிகுசோலையு *
மிரத்னகோபுரமதில்களும் *
இதிகாசவுரைபேசுமதிநிபுணர்வாசமோ *
டிசைசகலதிருவுமோங்கிச் *
சீர்மேவுதிருவானைக்கோட்டைமுருகற்குநீ *
செய்கவோர்கோவையென்று *
செந்தமிழ்வளர்த்திடத்தென்னனிகர்வான்செல்வ *
வான்கொடையில்வள்ளல்போல்வான் *

தீர்க்காயுளான்சீர்க்கொழும்புநகரதனில்வாழ் *
சீலசிவகுருநாதவேள் *
சேயனெனவருநமசிவாயமெனுமாமுகில் *
சிறந்துபொன்மாரிபொழியத் *
தார்மேவுமலையாளமகராசராசசமு *
கத்தில்வளர்வித்வரத்னம் *
சகலகலைஞாபகக்குட்டிக்கவிஞசோ *
தரவீரவாகுமன்னன் *
தவத்தினிலுதித்தவடிவேலெனுங்கற்பகக் *
தழைவுற்றுமுகமலர்ந்து *
தரணியெல்லாம்பரிமளித்திடக்கோவையாந் *
தாரைவேய்ந்தனதழையவே. *

---





உ

குமரன்றுணை.

# திரு ஆனைக்கோட்டை

# சுப்பிரமணியர்கோவை.

காப்பு.

வெண்பா.

பூமேவுவேந்தர்புகழ்திருவானைக்கோட்டைக் *
கோமேவுசீர்க்குகன்மேற்கோவைசொல்ல மாமேவு *
மூத்தநயினேர்சுரர்கோன்முன்வைத்தநந்தனத்தைக் *
காத்தநயனுரவிந்தர்காப்பு. *

இதுவுமது கட்டளைக்கலித்துறை.

பூவையும்வேதம்புகலானைக்கோட்டைப்புனிதர்புவி *
யாவையுங்காப்பவர்வேலவர்மீதிலியம்புமிந்தக் *
கோவையும்பாவலர்காவலரோத்தக்குளிர்தமிழ்சேர் *
காவையுமூத்தநயினர்கொடுத்தருணல்குவரோ. *

நூல்.

## கைக்கிளை.

காட்சி.

திருவளர்கொண்டல்சிலைவாள்பவளஞ்செழுங்கமலம் *
மருவளர்கோங்கிவைவாய்ந்தொருவஞ்சிவயங்கினதைத் *
தருவளர்செல்வத்திருவானைக்கோட்டைத்தலத்திலருள் *
உருவளர்சண்முகநாதர்நற்காவகத்தூடுகின்றே. (க)

ஐயம்.

மின்னேநுங்குவிண்வளர்மேனகையோமகவேள்ரதியோ *
பொன்னேவனாயினணங்கோகுடிலைப்பொருளையரன் *
முன்னேதினநற்றிருவானைக்கோட்டைமுருகர்வெற்பில் *
என்னேகையானநெஞ்சேதெரியேனிங்கெதிர்ந்தவரோ. (உ)

துணிவு.

வண்டார்ந்தகூந்தலிற்பூவாட்டமுற்றனவாய்ந்தவிரு *
தண்டாமரைமலரோர்பூவிற்பூத்தனதன்மையிதால் *
கண்டார்க்கருள்செய்திருவானைக்கோட்டைநற்கந்தர்வெற்பில் *
உண்டானசோலையில்வாழ்கின்றமாதிந்தவொண்டொடியே. (ங)

குறிப்பறிதல்.

படங்காட்டரவல்குற்பொன்வாழும்பாற்கடல்பண்ணவர்க்குக் *
குடங்காட்டிவெண்சுதையீய்ந்ததுபோற்றமிழ்கூறுவர்பால் *
திடங்காட்டிச்செல்வந்தருமானைக்கோட்டைநற்சேய்வரைப்பொன் *
இடங்காட்டும்பார்வையென்னெய்தனக்கீய்ந்தனவின்மருந்தே. (ச)

கைக்கிளை முற்றிற்று.

## இயற்கைப் புணர்ச்சி.

இரந்துபின்னிற்றற்கெண்ணல்.

காவியங்கண்ணிக்கிதமிகச்சொல்லிக்கனதனஞ்சேர்ந் *
தாவியுய்வேனற்சிவகுருநாதனருண்மகவாய் *
மேவியசெல்வனமசிவாயந்தொழும்வேன்முருகர் *
பூவியலானகனிதேன்பொருந்தும்பொழிலிடத்தே. (ரு)

இரந்துபின்னிலைநிற்றல். *

புருவவிற்கோட்டிவிழிக்கணைபூட்டிப்பொருதென்னெஞ்சு *
டுருவும்படியெய்துபார்நோக்கிநிற்றனல்லூகமுள்ள *
அருவுறுமின்னிடைமானேயுனக்கிகழ்வாமலர்ந்த *
மருவுறுசோலைக்குகனானைக்கோட்டைவரையிடத்தே. (சு)

முன்னிலையாக்கல்.

சேடியரோடெய்திப்பூஞ்சுனையாடவுஞ்செம்பொன்வண்டு *
டாடியசோலைமலர்கொய்யவுமகலாதுநிற்கும் *
மோடியென்செல்வத்திருவானைக்கோட்டைமுருகர்வெற்பில் *
பாடியவண்டினஞ்சேர்ந்தார்க்கும்பூங்குழற்பைங்கிளியே. (எ)

மெய்தொட்டுப்பயிறல்.

தொடுவாரெவரவர்மேற்பழிசாற்றத்துணிந்தவிவள் *
இடுவார்முலைக்கனமெண்ணுமற்கேசத்திருந்திரிடை *
வடுவாரில்வேலர்திருவானைக்கோட்டைவரையினும்மை *
அடுவார்பிறரன்றுயானேயகலுமளியினமே. (அ)

பொய்பாராட்டல்.

முல்லையுங்காவியும்வள்ளையுஞ்சாதியுமோகமதன் *
வில்லையுஞ்சேருன்முகம்போலத்தான்பெறவேண்டுமென்றே *
அல்லைவெல்வேலர்திருவானைக்கோட்டையணிவரைக்கண் *
எல்லையில்லாத்தினந்தாமனாவேதனையேந்தியதே. (கூ)

இடம்பெற்றுத்தழால்.

கடிதடவாசையிற்கட்டுண்டநெஞ்சங்களிப்புறத்தேம் *
படிதடமும்பலகாவுஞ்செறிந்தபகர்படைவாட் *
கொடிதடமேவுநமசிவாயஞ்சொற்குமரன்வெற்பின் *
அடிதடஞ்சேர்ந்துநற்றேனுண்ணவித்தலமாம்நமக்கே. (ய)

வழிபாடுமறுத்தல்.

அருங்கோடைதன்னிலுங்கார்காலம்போலநல்லார்வளஞ்சேர் *
மருங்கோடைசூழுமிக்காவகத்தேநல்லவாழிடந்தந் *
திருங்கோடைமன்னர்புகழானைக்கோட்டையெழிற்குமரன் *
வருங்கோடைசேர்பொழின்மாதவியேதுயர்மாற்றுவையே. (௰க)

இடையூறுகிளத்தல்.

கலைகாட்டுநீதிபெறுமானைக்கோட்டைநற்கந்தர்பொழில் *
சிலைகாட்டுநன்னுதன்மின்னேயோர்மாதங்கஞ்சேர்ந்துபல *
நிலைகாட்டவேட்டைக்குவந்தேனதனுக்குநீயிசைந்து *
மலைகாட்டியம்புலிகாட்டிக்கைவேலைமறைத்ததென்னே. (௰உ)

நீடுநினைந்திரங்கல்.

இப்போதுபாவலரெம்மிடிதீரொன்றிசைத்திடிற்றீர்த் *
தப்போதருளுநமசிவாயச்செல்வனுவலுடன் *
முப்போதும்போற்றியசண்முகவேண்முகின்மொய்க்கும்வெற்பில் *
எப்போதுதந்தருள்வாய்மயிலேயிதழின்னமுதே. (௰௩)

மறுத்தெதிர்கோடல்.

திண்ணியகாதலர்கொண்மயலாங்கடல்செய்கணையாய் *
எண்ணியநன்னிறைமேன்மீறிச்சென்றதையீண்டணைக்கத் *
தண்ணியலானதிருவானைக்கோட்டைநற்சாமிவெற்பில் *
புண்ணியஞ்செய்தனமாநெஞ்சமேயென்புரிவதுவே. (௰௪)

வறிதுநகைதோற்றல்.

நற்றேன்பொழிந்திடுகாவிலெப்போதுநடந்துநடந் *
திற்றேமுளமெனத்தேர்ந்தோவலதுபின்னென்னினைந்தோ *
கற்றோர்க்கருள்செய்திருவானைக்கோட்டைக்கடம்பன்வெற்பில் *
சற்றேமுறுவல்செய்தாண்மலர்மேவியதார்குழலே. (௰௫)

முறுவற்குறிப்புணர்தல்.

ஆதரந்தாங்கற்கரிதாகப்பேர்மையலாற்றிலுற்றுப் *
போதங்கலங்குமென்னாருயிர்வாழ்ந்திடப்பொங்குதமிழ்க் *
காதரவானகுகனானைக்கோட்டையணிவரைக்கண் *
போதணிகூந்தற்றிருமாதுபுன்னகைபொற்புணையே. (௰௬)

முயங்குதலுறுத்தல்.

சாரங்கபாணிதிருமாதைப்பெற்றிடுந்தன்மையைப்போல் *
ஆரங்கமழுங்குழலாளைநான்பெற்றதார்கொடைக்குச் *
சீரங்கர்மன்னனமசிவாயம்பணிந்தேத்துசெவ்வேள் *
காரங்கண்கொண்டவரைசார்ந்தவிம்மலர்க்காவகத்தே. (௰௭)

புணர்ச்சியின்மகிழ்தல்.

கரும்பொருபூகத்தெழில்காட்டுமித்தடக்காவின்மங்கை *
பெரும்பொருப்பொத்ததனஞ்சேர்ந்தனந்தமிழ்ப்பேணிநிதி *
தரும்பொருண்மன்னனமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பில் *
அரும்பொருளும்பெறலாமுயன்றுற்புவியானதிலே. (௰அ)

புகழ்தல்.

காலொன்றினின்றினமெண்ணிறுங்காலங்கழியவனப் *
பாலொன்றிநோன்புகண்ணீர்சிந்திச்செய்பினும்பங்கயங்காள் *
சேலொன்றுபூந்தடஞ்சேரானைக்கோட்டைத்திருக்குமரர் *
மாலொன்றுபூதரமான்கொங்கைபோலெழில்வாய்ப்பதின்றே. (௰௯)

இயற்கைப்புணர்ச்சிமுற்றிற்று.

## வன்புறை

அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தல்.

தீட்டும்பொன்வேல்விழிமானேயுண்ணுணிநின்சிந்தைநையேல் *
நாட்டும்புகழ்வளர்சேயானைக்கோட்டைநன்னகத்துமை *
யூட்டும்பகழிவிழிநேருன்பாஙகியரோர்ந்துனக்குப் *
பூட்டும்பணியெனவேயணியாவையும்பூட்டினனே. (௨௰)

பெருநயப்புரைத்தல்.

நிரையானமுத்தங்கொள்செவ்வல்லிபுங்கதிர்நேர்ந்தலரா *
மரையானதுந்தனைப்போற்றுங்கவிஞர்மனமகிழ *
உரையாரநல்குந்திருவானைக்கோட்டையிலுற்றசெவ்வேள் *
வரையாயும்வண்டினங்காளுளதோவுங்கள்வாவியிலே. (௨௧)

தெய்வத்திறம்பேசல்.

பார்க்கத்திகழும்பொன்னகம்பசப்பதென்பாங்கிளம்மைச் *
சேர்க்குநற்றெய்வச்செயலதைநீக்கிச்செறிந்தநட்பை *
ஆர்க்கும்பிரிக்கவரிதரிதாற்றமிழ்க்கம்பொனல்கக் *
கார்க்குலமானகுகனானைக்கோட்டைநற்காவகத்தே. (௨௨)

பிரியேனென்றல்.

சேமந்தழைக்குநமசிவாயந்தொழுஞ்சேய்கடத்தில் *
மாமயிலேவருந்தேல்கடல்சூழ்ந்தவையகத்தில் *
சோமன்றிசைதப்பிடினுநின்கொங்கையிற்றோய்சுகமும் *
நாமமும்யான்மறவேன்பிரியேனெந்தநாளினுமே. (௨௩)

பிரிந்துவருகென்றல்.

குல்லைபுற்றூர்புயன்போற்றானைக்கோட்டைக்குகன்வரைக்கண் *
வல்லியொப்பாய்தனமின்னேநம்மாருயிர்வாழ்வெனவென் *

சொல்லைநல்லுண்மையென்றெண்ணுதியாங்குயர்சோலைபூழ் *
றொல்லையிறன்வருவேன்விளையாடுகவுண்மகிழ்ந்தே. (உ௪)

இடமணித்தென்றல்.

அந்திரக்கண்ணிமின்காவானைக்கோட்டையிலன்போடன்ன *
சந்திரங்சட்டியுலகோர்க்கருத்துநற்றன்மதுணை *
மித்திரமானநமசிவாயந்தொழுமவேள்வரைக்கண் *
சித்திரமாங்கனியென்காவுக்கியுஞ்சிறந்துவந்தே (உ௫)

வன்புறைமுற்றிற்று.

## தெளிவு.

முன்னைநட்பானவர்போற்சொன்னவார்த்தையைமுற்றுநம்பும் *
என்னைத்தனிவைத்தங்கேதரியார்மன்னரொன்றுநன்றாய் *
மின்னைப்பெறுமணிமேடையர்க்கிந்துமிசப்புரக்கும் *
பின்னைபும்போற்றுங்குகனானைக்கோட்டைப்பிறங்கலிலே. (உ௬)

தெளிவுமுற்றிற்று.

## பிரிவுழிமகிழ்ச்சி.

செல்லுங்கிழத்திசெலவுகண்டுளத்தொடுசொல்லல்.

தொடைதாங்குகூந்தலுடைதாங்குநின்கைதொயின்முலையை *
யிடைதாங்குமோவெனநைவதுபோற்சிலம்பேங்கமுத்துக் *
குடைதாங்குமன்னர்புகழானைக்கோட்டைக்குமரன்வெற்பில் *
நடைதாங்கும்வஞ்சியைப்போற்செல்லுமாநெஞ்சநம்முயிரே. (உ௭)

பாகனொடுசொல்லல்.

இனம்பார்புகழநவவீரருட்பணிந்தேத்துமிகத் *
தனம்பாவலர்க்குத்தருமானைக்கோட்டைத்தலமுருகர் *
தினம்பார்க்குங்காவிலிருபாலும்பார்த்துத்திகழ்ந்தொல்கியென் *
மனம்பார்த்துச்செல்வதுபார்வலவாவொருமான்மகிழ்ந்தே. (உ௮)

பிரிவுழிமகிழ்ச்சிமுற்றிற்று.

## பிரிவுழிக்கலங்கல்.

ஆயவெள்ளம்வழிபடக்கண்டிதுமாயமோவென்றல்.

மாதென்னனும்பரன்சேயானைக்கோட்டைமயின்முருகன் *
போதென்னும்பாதந்தொழுமடியார்தொகைபோற்பரவும் *
ஆதென்னச்சொல்லுமுலையாளிவ்வாயத்தொகையினைவிட் *
டேதென்னமாயமின்போலநம்முன்னம்வந்தெய்தியதே. (உ௯)

வாயில்பெற்றுய்தல்.

வானோர்மருந்துபெற்றுய்ந்தேன்மயற்பிணிமாற்றுதற்குத் *
தேனார்ந்தசோலைத்திருவானைக்கோட்டைநற்சேய்வரைவாழ் *

மானார்விழிவண்டயல்வாழ்மலர்களில்வாஞ்சையின்றிக் *
காணாரம்மின்முகச்செந்தாமரையிற்கவிந்ததுவே. (௩௰)

பண்புபாராட்டல்.

நிதியார்ந்தசெல்வத்திருவானைக்கோட்டைநிறைந்ததொண்டர் *
துதியார்ந்தவேலவர்சோலையில்வாழ்கின்றதோகைமுகம் *
மதியாமெனின்மதிதேய்வுறுங்கொங்கைவனசமெனில் *
கதியார்கதிர்கண்டலரும்பின்னென்சொலக்காரிகைக்கே. (௩௧)

பயந்தோர்ப்பழிச்சல்.

புரியாய்ந்தமுத்தம்பவளம்பொருகம்பொன்னுமெற்குச் *
சரியாகநல்கித்தனையகலாவின்பந்தந்துசெல்வம் *
பிரியாமல்வாழுங்குகனானைக்கோட்டைப்பிறங்கலின்கண் *
வரியார்ந்தகண்ணன்புபெற்றாளைப்பெற்றவர்வாழியவே. (௩௨)

கண்படைபெறாதுகங்குனோதல்.

தேகச்சுகநன்னமசிவாயத்துக்குஞ்சீருடனன் *
பாகத்தொண்டர்க்குந்தரும்வடிவேலரணிவரையில் *
போகக்கனியைப்புணர்போதவளன்புபூண்டுதந்த *
மோகக்கனற்பனிக்கார்கொண்டயாமத்துமூண்டதுவே. (௩௩)

பிரிவுழிக்கலங்கன்முற்றிற்று

## இடந்தலைப்பாடு.

தந்ததெய்வந்தருமெனச்சேறல்.

மன்னவனாநமசிவாயந்தன்மடத்தின்முன்னும் *
அன்னமுண்டார்க்குப்பின்னுந்தரல்போலவனாய்ந்துதொழும் *
மின்னந்தவேற்றெய்வமுன்றந்தபொன்னினைமேவநமக் *
கின்னந்தருநெஞ்சமேயெழுவாழிநீயென்னுடனே. (௩௪)

முந்துறக்காண்டல்.

மனையாடகஞ்செல்வநாவலர்க்கீய்ந்தவர்வாழ்த்துகவி *
புனையாதியானகுகனானைக்கோட்டைப்பொருப்பிடத்தில் *
சுனையாடிப்பூவெடுத்துப்புனங்காத்துச்சுடரொளிபோல் *
எனையாளுந்தெய்வக்கனியுருவாய்நின்றதென்னுயிரோ. (௩௫)

முயங்கல்.

கோவையொப்பானநமசிவாயம்மென்குமரர்தம்மேல் *
கோவையைப்பாடுநன்னாவலரோயெனக்கூறிமணிக் *
கோவைநன்முத்தந்தனமீய்வதொப்பக்குளிர்ந்ததரக் *
கோவைநன்முத்தந்தனமுந்தந்தாளின்பங்கூர்ந்திடவே. (௩௬)

புகழ்தல்.

நீங்காதசெல்வக்குகனுனைக்கோட்டைநன்னீர்வளைக்கண் *
பூங்காவிமேவித்திகழிவள்வெண்ணகைப்பொற்பினைக்கண் *
டாங்காங்குமுல்லையலராயுதிர்ந்தனவாரங்களோ *
பாங்கானமெய்யுந்துளைபட்டதாயிற்பகர்வதென்னே (௩எ)

ஆயத்துய்த்தல்.

கண்வளர்கண்வலைவீசியென்னுள்ளக்கலைகவர்ந்த *
பண்வளர்நன்மொழிமானேகருணைபதிந்தமனத் *
தண்வளர்வேலர்திருவானைக்கோட்டைச்சயிலமதில் *
விண்வளர்மங்கையரொப்பாநின்னாயத்தின்மேவுகவே. (௩அ)

இடந்தலைப்பாடுமுற்றிற்று.

## பாங்கற்கூட்டம்

தலைவன்பாங்கனைச்சார்தல்.

ஏர்கொண்டவேல்குகன்மேற்கோவைசொல்பவர்க்கேய்பிணியைக் *
கூர்கொண்டுநீக்குதல்போலானைக்கோட்டைநற்கோத்திரத்தில் *
தார்கொண்டமின்னிடையொத்தநெஞ்சேயெழுதண்ணருளாம் *
நீர்கொண்டுதோழனங்காமாக்கினிதன்னைநீக்குவனே. (௩௯)

பாங்கன்றலைவனையுற்றதுவினாதல்.

மாதமும்மாரிபெய்சீரானைக்கோட்டையில்வாழ்முருகர் *
ஏதமுறுவெற்பணங்கானதுற்றதெனப்புயமும் *
சீதமுகாம்புயமும்வாடிமேனியுந்தேம்பிநிறை *
யோதமுநீங்கிப்புலம்புவதேன்சொல்புரவலனே. (௪௰)

தலைவனுற்றதுரைத்தல்.

தம்பால்வந்தோர்க்கருள்சீரானைக்கோட்டைநற்சாமிவரை *
யம்பாலில்வாழொருபெண்ணனைசெவ்விழியான்மருட்டி *
யெம்பாலினீள்கரத்தாற்பற்றியெண்விதமாயிராந்து *
கொம்பானன்மார்பினிற்பாய்ந்துவல்வீரத்தைக்கொண்டதுவே. (௪௧)

கற்றறிபாங்கன்கழறல்.

கன்னனைப்பானநமசிவாயந்தொழுங்கந்தன்வெற்பில் *
பொன்னம்புயங்கொண்டமாலனையாய்மருப்பூந்தொடைசூழ் *
பின்னற்குழல்சிற்றிடைகள்ளநாட்டங்கொள்பேதைக்குநீ *
யென்னமயக்கமுற்றாயிதுவோமன்னரின்முறையே. (௪௨)

கிழவோன்கழற்றெதிர்மறுத்தல்.

மங்களமானகுகனானைக்கோட்டைவரையிடம்வாழ் *
பங்கயச்செல்வியனையாரிருதனபாரங்களும் *
திங்களைநேர்முகமுங்கனிவாயுந்திருவுங்கண்டால் *
புங்கவரும்புகலாருன்னைப்போலிந்தப்புன்மொழியே. (௪௩)

கிழவோற்பழித்தல்.

ஆரங்கொள்வேலர்திருவானைக்கோட்டையணிகொள்வெற்பா *
ஈரங்கொள்வல்லியிற்கட்டுண்டுசிங்கமிடைவதுபோல் *
வாரங்கொள்கொங்கைகொடுதாக்கும்வஞ்சிக்குவாடினையுன் *
வீரங்கொள்சிந்தையெங்கேயுனைப்போலில்லைவீரர்களே. (சச)

கிழவோன்வேட்கைதாங்கற்கருமைசாற்றல்.

அயிலேந்துசண்முகன்சீரானைக்கோட்டையணிவளைக்கண் *
மயிலேகிகர்மின்விழிவலைவீசியென்வன்மைதனைத் *
தொயிலேறுகுகினிற்கொள்ளப்பயோதரந்தோன்றக்கண்ட *
குயிலேய்க்குமென்னிடைநீயுங்கொடுஞ்சொற்குயில்கின்றையே. (சரு)

பாங்கன்றன்மனத்தழுங்கல்.

மேலானசெல்வம்பெறுமானைக்கோட்டைச்செவ்வேள்வளைக்கண் *
மாலானதுதந்தமங்கைக்குத்தாமரையாவதனம். *
சேலாவிழிசொன்னச்செப்பாமுலைகண்டுசிணியிட்ட *
பாலாமொழியெனைவானோமென்பகருவதே. (சசு)

தலைவனேட்டழுங்கல்.

மாநலஞ்சேர்ந்தகுகனானைக்கோட்டைவளங்கொள்வெற்பா *
நானக்குழலிமயலாலுனக்கென்றனன்மொழிகள் *
கானலிற்பெய்தமழையொத்ததார்த்துக்கணகவளை *
தானங்கடக்கிற்றடுக்கவுண்டோவொருதாபரமே. (சஎ)

எவ்விடத்தெவ்வியற்றென்றல்.

பூவாய்த்ததார்மைக்குழலாட்குவாழிடம்பூங்கற்பகக் *
காவாதரும்பொன்வரிசைகள்பெற்றுக்கவிஞர்தினம் *
பாவாற்புகழும்நமசிவாயந்தொழும்பண்முருகர் *
மாவாழும்பூதரமாதலைவாசொல்லிவ்வாறெனவே. (சஅ)

அவனவ்விடத்திவ்வியற்றென்றல்.

வில்லேநுதன்மின்னும்வேலேவிழியெழின்மெய்மயிலே *
வல்லேதனம்பவளமேயதரமெம்மண்டலத்தும் *
சொல்லேறுசெல்வத்திருவானைக்கோட்டைச்சுவாமிமகிழ் *
மல்லேர்வரைப்பொழிலேயிடமென்னுயிர்மாதினுக்கே. (சகூ)

பாங்கனிறைவனைத்தேற்றல்.

கலைபாய்ந்தசெல்வனமசிவாயந்தொழுங்கந்தன்வெற்பில் *
சிலையாம்புருவத்தெரிவையைநானெல்லைசென்றுகனி *
யிலைபார்ந்தசோலையிற்பார்த்துநின்பாலில்வந்தெய்தமட்டும் *
மலையாதிருமன்னவாமையலானதைமாற்றிவிட்டே. (ருய)

குறிவழிச்சேறல்.

தொடையாரொன்காவலனெஞ்சங்கலங்கிச்சுழலவைவேற் *
படையானமீதவியபைங்கிளிகல்விக்குப்பண்டகல்கும் *
விடையாருமீசர்சுதனைக்கோட்டைச்செவ்வேள்வளாக்கண் *
இடையானசோலைமலர்கொய்யுமோவங்கிசைந்துநின்றே. (ருக)

இறைவியைக்காண்டல்.

வண்டேமலர்க்குழல்பொன்மதியேமுகமாவினிய *
கண்டேமொழிசெங்கயலேவிழிசொன்னகாவலன்பெண் *
திண்டேரரசர்புகழானைக்கோட்டைத்திருமுருகர் *
தண்டேன்பொழியுமிக்காவேயிடமிவட்கானிசமே. (ருஉ)

இகழ்ந்ததற்கிரங்கல்.

வெண்டரளங்கொண்டசெம்பவளக்கிண்ணமேவியதேன் *
கொண்டவிம்மங்கையைக்கண்டாலுங்கைதொடக்கொள்வர்மையல் *
தண்டமிழ்மன்னுஞ்சுகனைக்கோட்டைத்தடத்தினின்முன் *
உண்டவர்தேடியிரங்குவரோதமுனைத்தன்மையே. (ருங)

தலைவனைவியத்தல்.

தலையானவேலர்திருவானைக்கோட்டைத்தடத்திலிரு *
மலையானதேந்திவிழிவாளுந்தீட்டிமதுவருத்தி *
அலையாமகசலத்தாழ்த்திச்சமர்செய்மின்னாட்குமற்றோர் *
விலையாவர்மீண்டுவந்தார்வல்லர்காணம்விறன்மன்னரே. (ருச)

தலைவியைவியத்தல்.

கங்குந்தரளங்கிகழானைக்கோட்டைக்கடம்பனெழில் *
பொங்கும்பதமன்பர்துன்பத்தைத்தீர்ப்பதுபோற்றிதலை *
தங்குந்கனங்கொண்டென்மன்னனுக்கீய்ந்ததழலதனை *
மங்கும்படிமலர்க்கையாலணைப்பரிம்மங்கையரே. (ருரு)

தலைவன்றனக்குத்தலைவிநிலைகூறல்.

கிளையுறுங்காவளர்செயானைக்கோட்டைக்கிரியிடத்தில் *
களையொடுங்காதன்முதிர்ந்துநின்றோண்முன்கடைந்துடைந்த *
அளையுந்தழல்கண்டவெண்ணெயும்போலுன்னகங்கலக்கி *
யிளையும்படியுருக்காநின்றபேமொழிலேந்திழையே. (ருசு)

தலைவன்சேறல்.

பூவும்புகழுந்திருவானைக்கோட்டைப்புனிதகுகன் *
மாவும்பலாவுஞ்செவ்வாழையுந்தெங்கும்வளர்பொழிலில் *
கூவுங்குயின்மொழிநின்றனளேயவள்கூர்கருணை *
தாவுமனத்தயவானின்றதேயென்றனியுயிரே. (ருஎ)

தலைவியைக்காண்டல்.

வான்போலருளுங்குகனைக்கோட்டைமலர்ப்பொழிலில் *
தேன்போன்மொழிக்கன்னிபானுவைத்தேடுந்திருமலர்போல் *
நான்போய்வருமட்டும்பூங்கலைகாண்டிடநைகின்றவோர் *
மான்போற்றனியிங்குநின்றனளான்மிகவாஞ்சையுற்றே. (ருஅ)

கலவியின்மகிழ்தல்.

இன்னிசைசேர்ந்தகுகனைக்கோட்டைநல்லேந்தலின்கண் *
மின்னிடைமேவியசொர்க்கமுந்தாங்கிவியனமுதும் *
பொன்னியன்மேனிக்கனிதந்தவிந்திரபோகமும்போல் *
என்னிலுமேவரதிகமுற்றார்புவியின்னிடத்தே. (ருகூ)

புகழ்தல்.

சீர்வாய்த்தசெல்வனமசிவாயந்தொழுஞ்சேய்தடத்தில் *
ஏர்வாய்த்தபூங்கொடிபோல்வியப்பாகவிலங்குமின்னே *
வார்வாய்த்தகொங்கைக்கிணையாம்வரையிலுமற்றிடத்துங் *
கார்வாய்புலம்பித்திரிதலுன்கூந்தலைக்கண்டஞ்சியே. (சூம)

பாங்கியொடுவருகெனப்பகர்தல்.

ஆழியைநேரன்பன்சொல்வதுகேளிங்கடைந்திடுங்கால் *
தோழியைச்சேர்ந்துவரவேண்டுநீயினித்தொல்புகழ்சேர் *
மேழியுற்றார்ந்தசெய்சேரானைக்கோட்டைச்செவ்வேள்வரைக்கண் *
ஏழியலார்ந்திடும்யாழ்நேர்மொழியுறுமேந்திழையே. (சூக)

பாங்கிற்கூட்டல்.

பண்டாங்குவேலர்திருவானைக்கோட்டைப்பருப்பதத்தில் *
தண்டாரணிமயிலேநீதிகழ்ந்திடுதாரகைக்குள் *
வெண்டாரகைப்பதிமேவுதல்போற்றெய்வமெல்லியர்க்குள் *
வண்டார்குழற்சசிபோற்சென்றுசேர்சகிமாதனையே. (சூஉ)

பாங்கற்கூட்டமுற்றிற்று.

## பாங்கி மதி யுடன்பாடு.

தோற்றத்தாலாராய்தல்.

மலர்கொய்யக்காவினடந்துலேந்தோதிகழ்மாமலர்கள் *
மலர்சுனையாடியகாரணமோகவிமன்னருற்ற *
அலர்தனைமாற்றுந்திருவானைக்கோட்டையபின்முருகன் *
அலர்தடப்பூதரமானேநின்மேனியயர்ந்ததுவே. (சூ௩)

ஒழுக்கத்தாலையந்தீர்தல்.

திருவுடன்றேன்றிப்பொற்பூதரஞ்சுற்றிச்சிவன்முடிமேல் *
உருவுடன்மேவிவிழிகளுக்குந்தண்ணொளிதரலால் *

செருவுடன்வெல்லுந்திருவானைக்கோட்டைநற்சேய்தடத்தில் *
மருவுடன்றேன்றுங்குழலாய்பிறையைவணங்கனின்றே. (௬௪)

சுனைநயப்புரைத்தல். *

சேயுங்கவிசொல்லுஞ்சிரானைக்கோட்டைநற்சேய்கவிஞர்க் *
கேயும்பிணிப்பகைதீர்த்தருட்செம்மைக்கிணங்கமின்னே *
வாயுன்னகைசொள்பகைமாற்றிச்செம்மைகண்வைத்துனக்கம் *
தோயுந்தளவத்தொடைவேய்ந்தநன்றிச்சுனைப்புனலே. (௬௫)

சுனைவியந்துரைத்தல்.

அன்போங்குவேலர்திருவானைக்கோட்டையணிவளைக்கண் *
பொன்போலிலங்கியமாதரசேயிந்தப்பூம்பொழிலில் *
முன்போலில்லாதநுதற்குருவேர்வுமுகத்தழகும் *
நின்போலயான்பெறலாமெஙிலாடுவனீர்ச்சுனையே. (௬௬)

தகையணங்குறுத்தல்.

குணங்கேண்மைமனனுந்திருவானைக்கோட்டைக்குமரன்வெற்பில் *
அணங்கேநின்வாய்வெண்மைகட்செம்மைநீங்கிவிட்டாலுனையெம் *
மணங்கேசரக்குழல்மாதென்னலாம்வருவாளவளைக் *
கணங்கேணிவாழிந்தக்காவினினின்றுகண்டுசெல்லே. (௬௭)

நடுங்கநாட்டம்.

தம்பாதந்தொண்டர்க்கருளானைக்கோட்டைநற்சாமிவெற்பில் *
வம்பாற்சிறந்தமலர்க்குழலாயொருவல்லியங்கூர் *
அம்பாற்கிழிப்புண்டடிபட்டலறிவல்லங்கமெல்லாம் *
செம்பாலொழுகக்கண்டஞ்சிநின்றேனுட்டியக்கமுற்றே. (௬௮)

பெட்டவாயில்பெற்றிரவுவலியுறுத்தல்.

ஆலயஞ்செய்துதிருவானைக்கோட்டையிலன்போடன்ன *
சாலையுஞ்செய்தநமசிவாயந்தினந்தான்றுதித்து *
வேலைக்கொள்வேளருளாற்செயமாநிதிமேவுகல்போல் *
மாலைக்குழலியைப்பாங்கியைவேண்டிமருவுவனே. (௬௯)

ஊர்வினுதல்.

மணித்தோடுவாய்த்தகுழையீர்நும்மூரொதிவ்வான்புனத்துக் *
கணித்தோவலதுமிகத்தூரமோவழியாததனைக் *
கணித்தோதும்யான்புதியேன்கவிராசர்கலிப்பகையைத் *
தணித்தோட்டும்வேலர்திருவானைக்கோட்டைச்சயிலத்திலே. (௭௰)

பெயர்வினுதல்.

எல்லாரும்போற்றுந்திருவானைக்கோட்டையிலேய்ந்துகவி *
வல்லார்துயரைத்தவிர்த்தருள்வேலவர்மால்வரைக்கண் *

மல்லாருநும்பதியீதென்னவும்வசைவாய்க்குமென்று *
சொல்லாவிடின்மடவீர்பெயராவதுசொன்மின்களே. (எக)

கெடுதிவினுதல்.

வீசியநீள்வலையைமீறித்தன்னினம்விட்டுநெஞ்சம் *
கூசியமேனிமெலிவுடனேர்கலைகுங்குமமும் *
பூசியவார்முலையீர்வந்ததோபுலவோர்க்கருள்செய் *
தேசியல்வேலர்திருவானைக்கோட்டைச்சிலம்பிடத்தே. (எஉ)

ஒழிந்ததுவினுதல்

வேய்முத்தைச்சங்கம்வரிபூகங்கன்னலின்மேவியொளி *
பாய்முத்தையங்கங்குவென்றன நாமதைப்பார்த்தவைகள் *
சேய்முத்தையன்வளர்சீரானைக்கோட்டையிற்சேர்ந்தனநம் *
வாய்முத்தைவெளவுமென்றேவொழிந்தீர்மொழிமங்கையரே. (எந)

யாரேயிவர்மனத்தெண்ணம்யாதெனத்தேர்தல்.

விதியேத்தும்வேலர்திருவானைக்கோட்டைநல்வெற்பிடத்தில் *
பதியேதுநுந்திருப்பேரேதுசென்னெறிப்பாங்கெதிந்த *
வதியோர்கலைவந்ததோவெனக்கேட்டனர்மன்னர்நம்பால் *
புதியேனெனுஞ்சொல்லியாதோவிவர்நெஞ்சிற்பூண்டதுவே. (எச)

எண்ணந்தெளிதல்.

இன்னாரிவரொன்றறிகின்றிலேன்கவியின்றொடைசூழ் *
பொன்னார்புயத்துக்குகனானைக்கோட்டைப்பொருப்பிடத்தில் *
உன்னுடெதுவென்றும்பின்வேறுகேட்டதுமுற்றுணர *
மின்னாரிவர்பொருட்டென்றேயென்னெஞ்சில்விளங்கினதே. (எரு)

தலைவன்கையுறையேந்திவருதல்.

சந்தாரந்தங்கவளையுங்கவிஞர்தமக்குநல்கும் *
மந்தாரமன்புகழ்சேயானைக்கோட்டைவளாயிடத்தில் *
தந்தார்சுகமுன்னமைமணந்தின்றுநந்தன்மையெல்லாம் *
வந்தாரவரிடஞ்சொல்லநல்வேலையும்வாய்த்ததுவே. (எசு)

தலைவனவ்வகைவினுதல்.

சங்கம்புகழுந்திருவானைக்கோட்டைநற்சாமிவெற்பில் *
சிங்கமொன்றோடித்திகைத்தங்கம்வாடிச்செறிந்தமலர்க் *
கொங்கம்பொலிகுழலீர்சிலைகோட்டிக்குறித்துவிட்ட *
புங்கம்பதிந்திடப்போந்ததுண்டோநும்புனத்தருகே. (எஎ)

எதிர்மொழிகொடுத்தல்.

திருவிற்சிறந்தநன்மாலனையாய்சிலைசேர்பகழி *
யுருவிமெய்நொந்தகலையும்வன்சிங்கமுமோடியுள்ளம் *

வெருவிநல்வேலர்திருவானைக்கோட்டைப்பொன்வெற்பிடத்தில் *
மருவியவிப்புனப்பாங்கரிலேதனிவந்திலவே. (எஅ)

இறைவனைநகுதல்.

பூணிடைமேவுங்குகனானைக்கோட்டைப்பொருப்பிடத்தில் *
சேணிடைத்தோன்றலின்மின்னேயிவரிங்குசேரநெஞ்சம் *
நாணிடப்பூந்தழைவாளிதைத்தோடிநலிந்தசிங்கம் *
தூணிடைமுன்னூற்றசிங்கத்தைப்பார்க்கிலுஞ்சூரத்ததே. (எகூ)

பாங்கிமதியின்வரவர்மனக்கருத்துணர்தல்.

வஞ்சியிவ்வேனற்புனங்காக்கவந்ததும்வாகுமன்னன் *
வெஞ்சினச்சீயம்வினவியிங்குற்றதுமெய்மையன்றால் *
விஞ்சியசெல்வக்குகனானைக்கோட்டைநல்வெற்பினிற்றம் *
நெஞ்சினிற்பூண்டதெல்லாஞ்சொல்லுமேயிவர்நேத்திரமே. (அ0)

பாங்கிமதியுடன்பாடுமுற்றிற்று.

## பாங்கியிற்கூட்டம்.

தலைவனுட்கோள்சாற்றல்.

யோகஞ்செறிந்தகுகனானைக்கோட்டைநல்லோங்கலின்கண் *
மாகனநேர்குழலீருமக்காடிமகிழவயன் *
வாகனமிந்திரனுட்டினிற்பொன்மயமானசங்கம் *
கோகனகந்தருவேனென்னையாளுங்குணமுடனே. (அக)

பாங்கிகுலமுறைகிளத்தல்

திணைவாழும்வாவிதிகழானைக்கோட்டைத்திருமுருகர் *
வணைவாழுமெங்கள்குலக்கொடியேர்குறமான்றலைவா *
விணைவாழுநன்மலர்பூண்பதல்லாமல்விகற்பமலர் *
தணைவாழுமாந்தர்தரிப்பதுண்டோசென்னிதன்னிடத்தே. (அஉ)

தலைவன்றலைவிதன்னையுயர்த்தல்.

பான்மைகொள்வேலர்திருவானைக்கோட்டைப்பருப்பதத்தில் *
மேன்மையுள்ளாரில்லைப்பெண்களைப்போலந்தவேலர்முன்னாள் *
கான்மைக்குழல்வள்ளியைக்கலந்தென்றுங்கனிந்திருக்கும் *
கோன்மையையேவரறியாரிவ்வார்த்தைநுவல்வதென்னே. (அங)

பாங்கியறியாள்போன்றுவினுதல.

கழங்குஞ்சுனையும்வியந்தாடிவாழுமிக்காவினிலே *
தழங்குஞ்சிலம்பணிமின்னார்பலரவர்தங்களிற்பொன் *
வழங்குநற்கன்னனமசிவாயந்தொழுமாமுருகர் *
முழங்குந்தடத்துன்னையாரிங்ஙன்வாட்டியமொய்குழலே. (அச)

இறையோனிறைவிதன்மையியம்பல்.

கொடைமின்னுஞ்செங்கைதிகழானைக்கோட்டைக்குமரன்வெற்பில் *
நடையன்னஞ்செங்கதலித்தொடையல்குனன்ஞகம்பொன்மின் *
இடைகொங்கைசெவ்விளநீர்கரந்தாமரைமெயட்டிண்டம்வேம் *
படைவிழிதிங்கண்முகமயிலேயென்பணிமொழிக்கே. (௮௫)

பாங்கிதலைவியருமைசாற்றல்.

படவாழரவல்குலெம்மாதரசைப்பகர்ந்தசொல்லைக் *
கடவாதசெல்வனமசிவாயந்தொழுங்கந்தர்வெற்பின் *
இடவாழுமன்னவெளியளென்றேசற்றுமெண்ணப்பெருய் *
மடவாளுருக்கொடுவந்தபொன்னுனமணிவிளக்கே. (௮௬)

தலைவனின்றியமையாமையியம்பல்.

கற்றவர்க்கும்புவியோர்க்குநற்சத்திரங்கட்டிவைத்த *
கொற்றவனுனமசிவாயஞ்சொற்குகன்வரைக்கண் *
உற்றவன்பானவிம்மாதுருவாமுன்னுனுற்றியவென் *
நற்றவமென்றுநினைத்தாற்றழைக்குமின்னலுயிரே. (௮௭)

பாங்கிநின்குறைநீயேசென்றுரையென்றல்.

பொன்போற்றிகழெங்கண்மங்கைக்குச்செல்வம்பொருந்துதன *
தன்போலும்வந்தநமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பில் *
மின்போலிலங்கியவேலாநின்னுள்ளத்தின்வேட்கைசொல்ல *
என்போலுள்ளார்கட்கிசையாதுநீசென்றியம்புவையே. (௮௮)

பாங்கியைத்தலைவன்பழித்தல்.

மான்செய்யுறுமிக்குநேர்விழிசொன்மின்வயினிலெளி *
யேன்செய்திநீசொல்லையென்றிருந்தேன்மயிலேமறுத்தாய் *
கான்செய்புபங்கொடிருவானைக்கோட்டைக்கடம்பன்வெற்பில் *
யான்செய்தபாவநின்மேற்குறைசொல்லனியாயமன்றே. (௮௯)

பாங்கிபேதமையூட்டல்.

மணியாரமேவுநமசிவாயந்தொழுமாமுருகர் *
அணியார்வரைக்கணவரைமுன்னுட்கிழமாகவும்பூங் *
கணியாகவுஞ்செய்தமின்குலமாமிக்கனிபிறருட் *
பிணியானதைச்சற்றுந்தானறியாச்சிறுபேதைமன்னே. (௯௰)

காதலன்றலைவிமூதறிவுடைமைமொழிதல்.

திடமிகும்வேல்கொண்டசீரானைக்கோட்டைத்திருமுருகர் *
தடமதிலன்றுவந்தேனென்றகைக்குத்தகுந்தநற்றேன் *
குடமிரண்டுஞ்செங்கனியுந்தாற்றியகோதைதன்னை *
மடமிகும்பேதையென்றுயெவர்க்கேற்குமிவ்வார்த்தைமின்னே. (௯௧)

பாங்கிமுன்னுறுபுணர்ச்சிமுறையுறக்கூறல்.

நலமேவுசெல்வத்திருவானைக்கோட்டைநகர்முருகர் *
தலமேவுபூதரம்வாழ்மடமாதந்தத்தன்மையளேல் *
வலமேவுநீமுன்மருவியபோலுமருவுகசீர் *
கலமேவுதிண்புயனேபிறராலென்னகாரியமே. (கூஉ)

தன்னிலைதலைவன்சாற்றல்.

அயின்மயின்மேவுங்குகனானைக்கோட்டையசலமின்னே *
தொயின்முலையாளெனைமேவாவிடின்மருத்தோய்ந்தசந்தம் *
பயில்பனிநீரிற்றினமூழ்கிச்சீதப்பலமலரில் *
துயிலினுமுள்வெப்பந்தீராதினியென்னசொல்லுவதே. (கூங)

பாங்கியுலகியலுரைத்தல்.

மேதினிபோற்றுந்திருவானைக்கோட்டைச்செவ்வேள்வரைவாழ் *
மாதினைமன்னவிரும்பினையாகில்வரைந்துகொண்ணீ *
வேதியரான்றவர்சொன்னூன்முறைப்படிமேவிமற்றைச் *
சாதியர்செய்யும்படியேயிவ்வையகத்தன்மையிதே. (கூச)

தலைமகன்மறுத்தல்

முதுவையத்திற்புகழாயானைக்கோட்டைநன்மூதறிஞர் *
வதுவையைப்போலுமணந்துகொள்வேன்முகவண்ணமதால் *
விதுவைவெல்யோகநமசிவாயந்தொழும்வேலர்வெற்பில் *
மதுவையொப்பாமொழிநின்றலென்றுருயிர்வாழ்ந்தபின்னே. (கூரு)

பாங்கியஞ்சியச்சுறுத்தல்.

வனத்தாரணிந்தகுகனானைக்கோட்டைவளங்கொள்வரைப் *
புனத்தாரிமன்மறைந்தான்காவல்கொள்ளப்புரவலவெம் *
இனத்தாரிப்போதினிலெய்துவரோதிலரிங்குகண்டால் *
சினத்தார்ப்பரொல்லையிற்செல்லுதியாங்களுஞ்செல்லுதுமே. (கூசு)

தலைவன்கையுறைபுகழ்தல்

நன்னாட்டுமன்னனமசிவாயத்துக்குநாவலர்க்கும் *
இன்னாட்டிலுஞ்செல்வமீய்ந்தருள்வேலவரோந்தலின்வாய் *
என்னாட்டிலுமெந்தவெற்பிலுமிந்திரனெய்திவளர் *
பொன்னாட்டிலுநிகரில்லைமின்னேயிந்தப்பூந்தழைக்கே. (கூஎ)

பாங்கிகையுறைமறுத்தல்.

மெய்ப்பொருள்சேர்ந்ததிருவானைக்கோட்டைநல்வேலர்வெற்பா *
வைப்பிலில்லாததைநல்குகின்றாய்மடவாரயலார் *
கைப்பொருள்வாங்கனியாயமன்றேற்கக்கண்டாலெமரொம் *
மைப்பின்னமாய்ச்சொல்வர்வாங்கேனின்செங்கைமலர்த்தழையே. (கூஅ)

ஆற்றுநெஞ்சினோடவன்புலத்தல்.

மாந்தழைமேனிப்பொன்வேளானைக்கோட்டைவரையிடத்தில் *
ஆந்தழைச்சோலையினிற்சிலவேளையிலாவதன்பாய் *
நாந்தழைக்கச்செய்யுமென்றெண்ணிவந்தவென்னன்னெஞ்சமே *
பூந்தழையென்குறைநம்போலும்வாடப்புரிந்ததுவே. (௧௯)

பாங்கியாற்றுவித்தகற்றல்.

பலங்குணமேவுவெற்பாவானைக்கோட்டைப்பதியிலருள் *
துலங்குங்குகனைத்துதிப்பார்க்குச்செல்வந்துலங்குதல்போல் *
நலங்கிளர்மின்னையிரந்துகொள்வேன்வரநாளிரவில் *
இலங்கியகாலையில்வாநின்றழையென்கையெய்துதற்கே. (௨௰)

இரந்துகுறைபெறாதுவருந்தியகிழவோன்,
மடலேபொருளெனமதித்தல்.

வனமேவுசேயருளேதொண்டர்நோய்கட்குமாமருந்தாய்த் *
தினமேவல்போனற்றிருவானைக்கோட்டைச்சிலம்பிடத்தில் *
அனமேநிகர்நடையார்தந்தகாமவழற்பிணிக்கு *
மனமேமருந்துமடலன்றிவேறில்லைவையகத்தே. (௨௰௧)

பாங்கிக்குலகின்மேல்வைத்துக்கூறல்.

அஞ்சுங்கணைவிழியார்தந்தகாதனல்லாடவர்க்கு *
விஞ்சும்பொழுதுபடங்கைப்பிடித்திருமெல்லியர்பால் *
கொஞ்சுங்குமரர்திருவானைக்கோட்டைநற்கோத்திரத்தில் *
மஞ்சும்பெறுமடலூருவொன்செய்வர்மான்விழியே. (௨௰௨)

அதனைத்தன்மேல்வைத்துச்சாற்றல்.

சீலங்கொள்செல்வத்திருவானைக்கோட்டைநற்சேய்தடத்தில் *
நீலங்கொள்வேல்விழியீரென்மனக்குறைநீங்கிடவே *
தாலங்கொள்மாமடலூர்வேனதற்குத்தகுந்தவெழில் *
கோலங்கொள்வேனுங்கண்முன்வருவேனென்றன்கொள்கையிதே. (௨௰௩)

பாங்கிதலைமகளவையத்தருமைசாற்றல்.

கனமிகுசெல்வத்திருவானைக்கோட்டைக்கடம்பன்வெற்பில் *
இனமிகநீபலகோலங்கொண்டென்னவிறைவவெங்கள் *
வனமிகுமங்கைக்கவையேறியுமடல்வாய்ப்பினென்றும் *
தனமிகவின்னடுவில்லார்தெரித்திடத்தானரிதே. (௨௰௪)

தலைமகன்றன்னைத்தானேபுகழ்தல்.

செம்மானுருவொருபோதும்பிணிமுகஞ்சேர்தலில்லாப் *
பெம்மானருள்வடிவேலவன்யானிந்தப்பெண்மயிலுக் *
கம்மானவேலர்திருவானைக்கோட்டையணிவரைக்கண் *
இம்மான்சொலுங்குறைதீரச்சந்தேகமினியில்லையே. (௨௰௫)

பாங்கியருளியல்கிளத்தல்.

நறையூறுந்தாறுமருகேபுண்டாம்பலநற்குருகார் *
சிறையூரகன்றிற்கருவுளமன்னசிகிநடத்தும் *
பிறையூர்சடையர்தன்சேயானைக்கோட்டைப்பிறங்கலின்வாய் *
நிறையூர்மனமுடையார்மடலூருதனேரல்லவே. (ளசு)

கொண்டுநிலைகூறல்.

மோடுறுநற்கலசக்கொங்கைவாயுண்கண்மொய்வளைக்கை *
யேடுறும்பூவணிபெண்ணைக்கொண்டுன்குறையின்றுமுடி *
தோடுறுங்கோதைகுறைமறுத்தாலெழிறூன்றமன்று *
சேடுறும்வேலர்திருவானைக்கோட்டைச்சிலம்பிடத்தே. (ளஎ)

தலைவியிளமைத்தன்மைபாங்கிதலைவற்குணர்த்தல்.

முலையோசிறிததிற்பொற்பாவையைமுத்தமிட்டம்மபால் *
இலையோவழாமலருந்தென்றுவாய்வைத்திசைப்பளின்னும் *
கலையோவுடுக்கத்தெரியாதென்சொல்லவிக்கன்னியின்பால் *
விலையோங்குபூணணிசீரானைக்கோட்டைச்செவ்வேள்வெற்பனே. (ளஅ)

தலைவன்றலைவிவருத்தியவண்ணமுரைத்தல்.

படிக்கழகாகியமானேநீசொல் லப்பருவத்திலே *
பிடிக்கடங்காவரிபோன்மங்கைதொண்டனைப்பேணியவர் *
மிடிக்கலிமாற்றுந்திருவானைக்கோட்டைச்செவ்வேள்வரைக்கண் *
வடிக்கணையொத்தவிழியாலென்னைவருத்தினளே. (ளகூ)

பாங்கிசெவ்வியருமைசெப்பல்.

வாவியுமூசலுமாடாண்மலர்ந்தமருவொடுதேன் *
மேவியபூக்களுஞ்சூடாள்குழலினில்வெற்பநற்சீர் *
தாவியவேலர்திருவானைக்கோட்டைத்தடத்தில்வளர் *
தேவியின்பாங்கிற்றமியேனின்றெங்கொறெரிவிப்பதே. (ளய)

தலைவன்செவ்வியெளிமைசெப்பல்.

பண்ணுக்கிசைந்தகுகனானைக்கோட்டைப்பருப்பதத்தில் *
விண்ணுக்குள்வாழ்மடவார்மெய்க்குமென்கிள்ளைமென்மொழிபால் *
பெண்ணுக்குணயகமேயென்வரவுநீபேசிலுன்னைக் *
கண்ணுக்குள்வைத்திமையான்மூடிக்கட்டிக்கனிந்திடுமே. (ககக)

பாங்கியென்னைமறைத்தபின்னெளிதெனநகுதல்.

மதியுநிதியும்பொருந்தினவாயினுமன்னவனே *
விதியின்றியெத்தொழிலீடேறுநீவிர்விரும்பிடினும் *
நிதியுறும்வேலர்திருவானைக்கோட்டைநன்னீர்வரைக்கண் *
ததியிதிலென்னைமறைத்தாலுமதெண்ணஞ்சார்தலின்றே. (ககஉ)

அங்கைபொருஅதவன்புலம்பல்.

குறைதவிர்ந்தென்றுநலம்பெறுவோமென்றுட்கொண்டுமிக *
மிறையுற்றுளேயும்விசாரக்களவில்விடுசெய்யென *
தறைபுகழ்வேலர்திருவானைக்கோட்டைத்தடத்தில்வளர் *
நறைகுழலேயெனைக்காப்பேனென்னுதுநகைக்கின்றையே. (கககங)

பாங்கிதலைவனைத்தேற்றல்.

நற்பாவைமாருந்தமிழ்மிகத்தேர்ந்தநலம்பொருந்து *
பொற்பானசெல்வத்திருவானைக்கோட்டையிற்போந்தவளால் *
எற்பானற்றுயினுமெண்மடங்கன்பென்னிறைவிகந்தர் *
வெற்பாவினிச்சற்றுமஞ்சாதிருநன்மைமேவுவையே. (கககச)

பாங்கிகையுறையேற்றல்.

அலைவாரிதிவளைவையத்திலூழ்வலிதாமெனவே *
தலைவாநன்றுகவிளக்கினதேநலஞ்சார்ந்தபல *
கலைவாய்த்தசெல்வத்திருவானைக்கோட்டைநற்கந்தர்மகிழ் *
மலைவாய்த்தசோலையின்மேவிவ்வசோகமலர்த்தழையே. (கககரு)

கிழவோனுற்றல்.

சுகமேவுவேலர்தனைப்பாடுவோர்க்குத்துலங்கமகிழ் *
அகமேவச்செய்வதுபோலானைக்கோட்டையணிசிறந்த *
நகமேவுமங்கைமகிழ்ச்சிசெய்தாளிதைநாடிலிவள் *
முகமேமதியென்னுளமேநற்செங்குமுதமலரோ. (கககசா)

இறைவன்றனக்குக்குறைநேர்பாங்கியிறைவிக்கவன்குறையுணர்த்தல்

கட்டழகாகியகாமனைப்போலொருகாவலர்வாய் *
விட்டுனையாதென்னெதிரில்வந்தார்மதிமேவுமின்னே *
மட்டுறுமாலைக்குகனானைக்கோட்டைவரையிடத்தில் *
இட்டமதாமலரெல்லாந்தருகுவரொன்செய்வதே. (கககஎ)

இறைவியறியாள்போன்றுகுறியாள்கூறல்.

பலவிற்கதலியிற்சூதத்தில்வெண்பிறைபாய்ந்துகுற்றக் *
குலவுங்கனிநறைவார்ந்தெழுந்தேதமிழ்க்கொண்டபுகழ் *
உலவுபொன்வேலர்திருவானைக்கோட்டைநல்லோங்கன்மணி *
நிலவும்படிவருகின்றதுபாரொழினேரிழையே. (கககஅ)

பாங்கியிறையோற்கண்டமைபகர்தல்.

பூதலம்போற்றுங்குகனானைக்கோட்டைப்பொருப்பிடத்தில் *
தாதவிழ்பூங்குழன்மானேவொருநற்றலைவனுன்மேல் *
காதலனாகியோர்சிங்கம்வினாவிக்கடிகமழும் *
மாதவிவாழுமிக்காவினிலேயின்றுவந்தனனே. (கககசு)

பாங்கியைத்தலைவிமறைத்தல்.

காட்டினற்சீர்பெற்றசேயானைக்கோட்டைநன்னகமதில் *
கோட்டிற்சிறந்தகுவிமுலையாயென்னகூறுதிநீ *
காட்டிற்றிரிந்துமதவேட்டையாடிக்கலங்கியுந்தன் *
பாட்டிற்செல்கின்றவர்தம்மைக்குறிப்பொடுபார்த்துநின்றே. (கஉ0)

பாங்கியென்னைமறைப்பதென்னெனத்தழால்.

அல்லும்பகலுமுனையகலேன்மிகவன்புடனீ *
சொல்லும்பணியைமறுத்தறியேன்றெண்டர்தொல்வினையை *
வெல்லுங்குமரர்திருவானைக்கோட்டைநல்வெற்பிடத்தில் *
கல்லுமுருக்குமொழியாயென்மாட்டென்கரப்பதுவே. (கஉக)

பாங்கிகையுறைபுகழ்தல்.

வண்ணத்தகைகொள்குகனானைக்கோட்டைவளாயிடத்தில் *
உண்ணத்தகுவனவல்லமின்னேபின்னொருமன்னவர் *
நண்ணத்தகுவனவல்லமற்றோருறைநாட்டிலுண்டென் *
றெண்ணத்தகுவனவல்லவசோகவெழிற்றழையே. (கஉஉ)

தோழிகிழவோன்றுயர்நிலைகிளத்தல்

காவலனானநமசிவாயந்தொழுங்கந்தரன்பர் *
நாவலர்மீதுதிருப்பார்வைபோலவர்நாகமின்னே *
சேவற்பெடையோடனமேவத்தாமரைச்சேக்கையிற்கண் *
டாவல்கொண்டென்னைக்கடைக்கணித்தேநிற்பாரன்மனரோ. (கஉங)

மறுத்தற்கருமைமாட்டல்.

கூட்டங்கொள்சோலைத்திருவானைக்கோட்டைக்குமரர்வெற்பர் *
நாட்டமெப்போதுநின்மேற்கொண்டுகாதலினைந்தசிந்தைக் *
கோட்டமுஞ்செங்கைத்தழைச்சோர்வும்பேரொழில்கூர்ந்தமெய்யின் *
வாட்டமும்பார்க்கச்சகியாதெனறலினிமாதரசே. (கஉச)

தலைவன்குறிப்புவேறாகநெறிப்படக்கூறல்.

அனத்தானெடுமின்சதமுனைகையிலுற்றைந்தருசேர் *
வனத்தானெடுமடல்பெற்றிடவோதிருமான்மனைக்கா *
சனத்தானடானநமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பர் *
புனத்தார்மடமயிலேயென்கொலோவெண்ணிப்போந்ததுவே (கஉரு)

தோழிதலைவியைமுனிதல்.

வெண்டாமரைமகள்சேரானைக்கோட்டைச்செவ்வேள்வரைக்கண் *
தண்டாமரைத்திருவேயம்பறன்னைத்தவிர்த்துயிர்போல் *
கொண்டாதரிப்பவர்பாலினினின்குறைகூறுகயான் *
அண்டாரிலுங்கொடியேன்குற்றஞ்சேமித்தருளுளத்தே (கஉசு)

விருந்திறைவிரும்பல்.

வனமாமிகுந்தநமசிவாயஞ்செய்மடத்தமுது *
தனமானவண்மைதிகழானைக்கோட்டைநற்சாமிவெற்பில் *
கனமாவிருக்குங்குழலீர்விருந்தினர்கட்குமது *
தினபாவுந்தேனுமிமையோரமுதினுந்தித்திக்குமே. (கசுக)

பாங்கியிற்கூட்டமுற்றிற்று.

## ஒருசார்பகற்குறி.

கிழவோன்பிரிந்துழிக்கிழத்தி மாலையம்பொழுதுகண்டிரங்கல்.

மாலையும்வெலலுமழகாலென்மேனியின்வாய்ப்பசப்பும் *
மாலையுந்தந்தவர்செல்லநல்லாரமும்வாகுளபா *
மாலையும்வேயுங்குகனானைக்கோட்டைவரையின்மின்னே *
மாலையுந்தோன்றிடவெய்யோன்கடற்கண்மறைந்தனனே. (கசுஉ)

பாங்கிபுலம்பல்.

வேளையொப்பானநமசிவாயந்தொழும்வேள்வளைக்கண் *
வாளையொப்பாம்விழிபாளன்பர்நீங்கவருந்துகின்ற *
வேளையுற்றுரழன்மாலையைத்தந்தவிகர்த்தனவிண் *
வாளையுற்றூர்விடப்பல்லரவாலொளிமாழ்குவையே. (கசுஙு)

தலைவனீடத்தலைவிவருந்தல்.

நீங்கியங்காவிற்பலபிரிவாய்மலர்நேர்ந்துசென்ற *
பாங்கியரென்வழியெய்துமுன்னென்முன்படர்குவரா *
ஏங்கியவென்றுயரொண்ணுமனென்னற்செல்லேந்தல்செல்வம் *
ஓங்கியவேலர்திருவானைக்கோட்டைநல்லோங்கலிலே. (கசுச)

தலைவியைப்பாங்கிகழறல்.

வரிந்தார்க்கும்பொற்கழன்மன்னவர்நம்மைவருந்தமின்னே *
பிரிந்தாரென்றெண்ணலெவர்க்கும்பிரிவெய்தும்பேசினன்மை *
புரிந்தார்ந்தசெல்வக்குகனானைக்கோட்டைப்பொருப்பிடத்தில் *
திரிந்தாரிராமருஞ்சீதையைநீங்கிமுன்சேயிழையே. (கசுரு)

தலைவிமுன்னிலைப்புறமொழிமொழிதல்.

உள்ளத்துபரும்விரகாக்கினியுமொழுகுகண்ணீர் *
வெள்ளத்தையுமன்னரோவறிகின்றிலர்வேண்டிநற்பா *
விள்ளத்தனந்தருஞ்சீரானைக்கோட்டைச்செவ்வேள்வனக்கண் *
எள்ளத்தனையுமிரக்கமில்லார்க்குரைத்தென்பயனே. (கசுசு)

பாங்கியொடுபகர்தல்.

அரும்புந்தனத்தைத்தழுவியபோதுமகலிடத்தும் *
கரும்பும்பின்வேம்புமெனமபிலேலிதிகற்றவர்க்குத் *

தரும்புகழ்சேர்ந்தநமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பில் *
விரும்புமிளிப்பையுங்கைப்பையுங்காட்டுவர்வேன்மன்னரே. (கசஎ)

பாங்கியச்சுறுத்தல்.

நெறிவாழுங்கற்பினிலைமையும்பெண்மையுநீடுமென்பர் *
அறிவாரொன்றெண்ணுவதல்லாதுமையலடைந்திடினும் *
செறிவாழ்வுதந்தநமசிவாயந்தொழுஞ்சேய்தடத்தில் *
பொறிவாழ்முலையணங்கேபலபேசுதல்பொற்பல்லவே. (கசஅ)

நீங்கற்கருமைதலைவிநினைந்திரங்கல்

பணமேவுசெல்வனமசிவாயத்துக்கும்பாவலர்க்கும் *
மணமேவுசோலைத்திருவானைக்கோட்டையில்வாழ்பவர்க்கும் *
கணமேவுதொண்டர்க்குநீங்காதிருந்தருள்கந்தனொன்று *
வணமேவுமன்னனொன்பாலகலாதுறவைத்திலரோ. (கசகூ)

தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்.

கடுகடென்றேசொல்விழியாய்நின்னுள்ளக்கவலையெல்லாம் *
விடுவிடென்றேசொல்வதுபோற்கவிஞர்க்குமிக்கநிதி *
கொடுகொடென்றேசொற்றிருவானைக்கோட்டைக்குமரன்வெற்பில் *
திடுதிடென்றேமிகவார்ப்பதுகேண்மன்னர்தேரொலியே. (கரு0)

சிறைப்புறமாகச்செறிப்பறிவுறுத்தல்.

பண்ணார்ந்தசொல்லவர்நல்லவர்நம்மன்பர்பண்புடனே *
தண்ணார்மலர்த்தழைகொய்துநல்கார்தஞ்சந்தஞ்சமென *
நண்ணார்பணியுங்குகனானைக்கோட்டைநலங்கொள்வெற்பில் *
எண்ணார்கண்ணுநோக்கார்நம்மைநாளையிருங்கணியே. (கருக)

முன்னிலைப்புறமொழிமொழிந்தறிவுறுத்தல்.

பூவினமேவியபொன்னனமேகரும்பூங்குயிலே *
காவினமேமின்னைநீர்மறவீர்கவிகற்றவர்மேல் *
பாவினமேலருள்சீரானைக்கோட்டையிற்பாலிக்கும்வேள் *
மாவினமேவியமேருவின்வேந்தர்மறப்பினுமே. (கரு௨)

முன்னின்றுணர்த்தல்.

மின்போலிலங்கியபூங்கணியார்சொல்லுமென்மொழியால் *
பொன்போற்றினைக்கதிர்யாவுங்கொய்தாரொமர்பூஞ்சமல *
மன்போற்றுவேலர்திருவானைக்கோட்டைநன்மாகிரத்தில் *
முன்போலிலைப்புனங்காவல்விட்டோமெழின்மொய்மனனனே. (கருந)

முன்னின்றுணர்த்தியோம்படைசாற்றல்.

கஞ்சமுனோர்முலைதான்சரிந்தாலுங்கலைமகள்போல் *
மஞ்சஞ்சும்பூங்குழல்வெண்மையுற்றாலுமிம்மாதினுக்குத் *

தஞ்சநின்பாலன் றியின்மறவேல்சொல்லுந்தண்டமிழ்க்கு *
நெஞ்சங்களித்தருள்வேளானைக்கோட்டைநன்னீர்வெற்பனே (கடு௪)

கிழவோன்றஞ்சம்பெறுதுநெஞ்சொடுகிளத்தல்.

மாப்பருகுங்கட்பொதிபூங்குழலியர்மற்புனத்தைக் *
காப்பதொன்றெண்ணுநெஞ்சேயானைக்கோட்டைநங்கந்தருள் *
பூப்பதொன்றெண்ணினகொண்டனாக்காப்பதுபோலினிமேல் *
மீப்பரவிவ்வெற்பில்யானுனைக்காக்கவுமேவினதே. (கடுரு)

ஒருசார்பகற்குறிமுற்றிற்று.

## பகற்குறியிடையீடு.

இறைவனைப்பாங்கிகுறிவரல்விலக்கல்.

அவைபுகழ்வேலர்திருவானைக்கோட்டையணிவளைக்கண் *
சுவைதருமேனற்கதிர்களையின்றெமர்தோன்றியிங்கு *
நவையறச்செய்யவருவாரமதுபொன்னங்கையிடம் *
குவையணிப்பூணன்னைபலகால்வருகுவள்கொற்றவனே. (கடு௬)

இறைவியைக்குறிவரல்விலக்கல்.

குனிவார்சிலைநுதற்றெய்வானைபண்சொற்குறத்தியுடன் *
இனிவாயிருந்துதன்மேற்பாநவிலன்பர்க்கென்றுமின்பம் *
நனிவாழ்வுநல்குங்குகனானைக்கோட்டைநலங்கொள்வளைக் *
கனிவாய்த்திருமயிலேசெல்லனீயந்தக்காவினுக்கே. (கடு௭)

இறைமகளாடிடநோக்கியழுங்கல்.

ஆடியவாவியுஞ்சிற்றிலுமூசலுமஞ்சுகங்கள் *
பாடியசோலையுமென்னேநினைக்கும்படர்ந்தெனைச்சீர் *
தேடியசெல்வனமசிவாயந்தொழுஞ்சேய்தடத்தில் *
கூடியகல்பவர்போலில்லைநாட்டிற்கொடியவரோ. (கடு௮)

பாங்கியாடிடம்விடுத்துக்கொண்டகறல்.

சேல்வந்துதாழ்விழிமாமயிலேயெனத்தேடியுன்றன் *
பால்வந்துகேட்கிற்புகலயாங்கள்செல்கின்றபண்பினைமால் *
போல்வந்தமன்னனமசிவாயந்தொழும்பொற்குமார் *
கால்வந்துலாவியகாவிதனேயெழிற்காவலர்க்கே. (கடு௯)

பின்றுணெடுந்தகைகுறிவயினீடுசென்றிரங்கல்.

அளிகாள்பசியசிறைமயில்காளெழிலார்குயில்காள் *
கிளிகாளென்னெஞ்சங்கிளர்வெய்துமோகிற்குங்கீர்த்தியெனத் *
தெளிகாவலனன்னமசிவாயந்தொழுஞ்சேய்வளைத்தேன் *
றுளிகாலிச்சோலைவறிதாகவென்றன்முன்றேன்றிடிலே. (கசுo)

வறுங்களாடிமறுகல்.

என்பூவையைக்கண்டிலேனுனைகோட்டைவேளேந்தலின்கண் *
மின்பூவிற்பெண்ணெனவங்கெனேமேவிவெகுண்டுவிண்ணும் *
தன்பூவிற்சென்றதென்றெண்ணிலென்செங்கைக்குத்தந்ததனம் *
பொன்பூதாங்குயிலேபுகல்வாயெங்குமேபோயினளே. (கசுக)

குறுங்தொடிவாழூமூர்நோக்கிமதிமயங்கல்.

பாரும்புகழுங்குகனுனைக்கோட்டைப்பருப்பதத்தில் *
தேரும்பகடுஞ்சிலைகணைமற்றுஞ்சிறந்துதிகழ் *
சீரும்பொருந்துநலம்யாவுந்தங்தெனைச்சேர்ந்தபொன்வாழ் *
ஊருமபெறுதற்கரிதென்றுசோருமென்னுள்ளமுமே. (கசுஉ)

பகற்குறியிடையீடுமுற்றிற்று.

## இரவுக்குறி.

இறயோனிருட்குறிவேண்டல்.

மழைமேவியெங்கும்வளைந்தாலிதூவினவாழுமெம்மூர் *
உழைமேவிடவுமொண்ணுதெமைப்போல்விருந்தொன்றுமக்கு *
இழைமேவுவேலர்திருவானைக்கோட்டைநல்லேந்தலின்கண் *
தழைமேவுகோதையரோயெய்துமேகங்குறன்னிடத்தே. (கசுங)

பாங்கிநெறியின்தருமைகூறல்.

பொருடரும்வேலர்திருவானைக்கோட்டைநற்பூதரத்தில் *
மருடருஞ்சீயமும்வேங்கையுமும்மதவாரணமும் *
கருடருநஞ்சரவுந்திரிந்தார்க்குமிக்கங்குலின்வாய் *
அருடருமிப்பதிக்கெவ்வாறுநீவந்தடைவதுவே (கசுச)

இறையோனெறியினதெளிமைகூறல்.

செஞ்சரவேடொழுஞ்சீரானைக்கோட்டைநற்சேய்தடத்தில் *
அஞ்சரக்கண்ணிவிலங்கினமென்னிடமார்த்துவந்தால் *
குஞ்சரக்கோட்டையொடித்தரிவீட்டிக்குடாவடியை *
வெஞ்சரத்தாலெய்துவாளாலிருள்வென்றுமேவுவனே. (சகசுரு)

பாங்கியவனாட்டணியியல்வினுதல்.

இழையாதுயாதுபொழில்வாவியாடுமிடமணிபூங் *
தழையாதுவாசத்தொடையாதுசொன்னந்தமிழ்க்குநல்கும் *
உழையார்கரத்தன்சுதனுனைக்கோட்டையிலோங்குசெவ்வேள் *
கழையாருஞ்சாரன்மன்னுவுங்கனாட்டுறைகன்னியர்க்கே. (கசுசு)

கிழவோனவனாட்டணியியல்வினாதல்.

இரைத்திடுங்கோடுறுஞ்சீரானைக்கோட்டைவேளேந்தலின்கண் *
உரைத்தென்பயனென்றனாட்டணியாவிகொள்ளோவியமே *
நிரைத்திடும்பூங்குழனின்னாட்டரிவையர்நேரணிபூ *
திரைத்திடுநீர்ச்சுனையாடிடஞ்சார்ந்தமுஞ்செப்பெனக்கே (கசுஎ)

அவற்குத்தன்னாட்டணியியல்பாங்கிசாற்றல்.

ஞானந்தழைக்குங்குகனானைக்கோட்டைநன்னாகமதில் *
கானந்தழைக்குஞ்செங்காந்தளம்போதுகயத்தின்முத்தம் *
நானந்தகரயந்தணிந்தாடுவர்நற்றழைசேர் *
தேனந்தமேவியமாதவிபாலெங்கள்செல்வியரோ. (கசுஅ)

இறைவிக்கிறையோன்குறையறிவுறுத்தல்

வைகொண்டகோட்டுக்களிறும்பல்லூகமும்வல்லியமும் *
மொய்கொண்டாற்றிவ்விருள்வாய்நின்மாட்டுமொழிதவறு *
மெய்கொண்டசெல்வனமசிவாயந்தொழும்வேள்வரைக்கண் *
மைகொண்டபூங்குழலாய்வரவேண்டினர்மன்னவரோ. (கசுகூ)

நேராதிறைவிநெஞ்சொடுகிளத்தல்.

மேதையர்போற்றுந்திருவானைக்கோட்டைச்செவ்வேள்வரைக்கண் *
பேதையர்மாதர்களென்றுடவர்வசைபேசுகின்ற *
காதைபலக்கவுயிர்நேரொன்காதலரைக்கடமார் *
பாதையிற்காரிருள்வாய்வரவேண்டினள்பைந்தொடியே. (கஎ௰)

நேரிளைபாங்கியொடுநேர்ந்துரைத்தல்.

மகத்தானசெல்வனமசிவாயத்தின்மடத்தமுதில் *
மிகத்தாகமாவருவார்போலவன்றெழும்வேலர்வரை *
யகத்தாரிக்கங்குலினின்காதல்கொண்டிங்கடைந்தவர்க்கு *
முகத்தான்மதியைவென்மின்னேபுகலென்மொழிந்திட்வே. (கஎக)

நேர்ந்தமைபாங்கிநெடுந்தகைக்குரைத்தல்.

நவ்வியினோக்கியின்பாற்பலகாலிற்றைநாளிரவில் *
செவ்வியபாதம்பரவிநன்மாமொழிசெப்பினதும் *
அவ்வியமாற்றுங்குகனானைக்கோட்டையணிவரைக்கண் *
இவ்வியலென்றுசொலத்தகுமோவெம்மிறையவனே. (கஎஉ)

குறியிடைநிறீஇத்தாய்துயிலறிதல்.

அயிலுமொப்பானவிழியணங்கேமறையாகமமும் *
பயிலுங்கனகக்குகனானைக்கோட்டைப்பருப்பதத்தில் *
மயிலுந்தம்மாமலர்ச்சேக்கையினீங்கியிம்மையிருள்வாய் *
துயிலுந்துறந்ததென்னேபிரியாததுயரமுற்றே. (கஎங)

இறைவிக்கிறைவன்வரவறிவுறுத்தல்.

நெய்திகழ்கூந்தனன்னேரிழையேமயனீடியன்பாய் *
எய்தினர்நம்மனைக்கீர்ந்தழைபூங்கொந்தினியநலம் *
செய்திசைசேர்ந்தநமசிவாயந்தொழுஞ்சேய்தடத்தில் *
கொய்தினிவாய்த்தந்துணைமேவிநீங்கினகொண்கரின்றே. (கஎச)

அவட்கொண்டுசேறல்.

வன்னஞ்செறிந்ததிருவானைக்கோட்டைமனுக்கள்குகன் *
தன்னம்பதத்தைத்துதித்தெதிர்போற்றுநற்றன்மையைப்போல் *
பொன்னம்புயவெற்பனையாமெதிர்கொள்ளப்போதுகம்வா *
மின்னஞ்சிடைபுயல்கண்டஞ்சுபூங்குழன்மெல்லியலே. (கஎரு)

குறியுய்த்தகறல்.

சந்தத்தொடுதிகழ்வேளானைக்கோட்டைச்சயிலத்தினின் *
தந்தத்தொடும்விழிதன்னொடுமேபகைசார்ந்திடுநற் *
கந்தத்தொடுவளர்முல்லையுங்காவியுங்கைக்கொடுநான் *
அந்தத்தொடுவருவேனிற்கநீயிவணாரணங்கே (கஎசு)

வண்டுறைதாரோன்வந்தெதிர்ப்படுதல்.

சேயானைக்கோட்டைச்சிலம்பினில்யானுனைத்தேடியுற்ற *
நோயானதைத்தவிர்ந்தென்னுளும்வாழ்ந்திடநோக்கம்வைத்தோ *
தேயாமதியிருபொன்மேருநித்திலஞ்சேர்பவள *
வாயாரமுதொடும்வந்தாய்நலமிகவாய்ந்தபொன்னே. (கஎஎ)

பெருமகளாற்றினதருமைநினைந்திரங்கல்.

வெதிர்புரைதோள்வள்ளிசேரானைக்கோட்டைச்செவ்வேள்வரைக்கண் *
கதிர்நுழையாவிவ்வடவியிற்காரிருளிற்கலங்கா *
தெதிர்விரைந்தோடுநிலையாக்குடிஞையுமிம்மடிகள் *
அதிரிடமுங்கடந்தெவ்வாறுவந்தனையாண்டகையே. (கஎஅ)

புரவலன்றேற்றல்.

நலங்கைக்கொளும்பொன்திருவானைக்கோட்டைநகர்முருகர் *
வலங்கைக்கொளத்தொண்டர்துன்பத்தைவென்றிடுமாண்பதுபோல் *
மலங்கைக்கொளுமுந்திராவிநின்கண்ணொத்தவாள்கைக்கொடு *
விலங்கைக்கொள்கங்குலைவென்றுவந்தேன்கவின்மேவனமே. (கஎகூ)

புணர்தல்.

நராதிபர்போற்றுங்குகனானைக்கோட்டைநன்னுகமின்னாள் *
அராமதிமந்தரமீய்ந்ததுமன்றிநம்மன்பனொரு *
வராமென்றுதானுமொத்துக்காமவாரிமத்தித்தமுதோர் *
இராவுக்குணல்கப்புசித்தின்பநான்மிகவெய்தினனே. (கஅய)

புகழ்தல்.

கங்கைச்சடையர்சுதனைக்கோட்டைக்கடம்பன்வெற்பில் *
பங்கையக்கைகொண்டெனைச்சேர்ந்தின்பந்தந்தபைங்கிளிநின் *
கொங்கைக்குத்தோற்றிளநீர்வெட்டுங்குற்றுங்கொடுபுவியோர் *
செங்கையிற்சோந்துகயிறுகமெய்யுந்திரிகின்றதே. (கஅக)

இறைமகளிறைவனைக்குறிவரல்விலக்கல்

கனியேர்பொருந்துங்குகனைக்கோட்டைநன்னகமதில *
இனியேறெனச்சிங்கமாவேங்கையுள்ளமுமேதமுறத் *
தொனியேறுங்காரிருள்வாயிவ்விதமிந்தச்சோலையினி *
தனியேவரேல்மன்னவாவென்னைச்சேர்ந்திடுந்தன்மைகொண்டே (கஅஉ)

அவனிறைவியையில்வயின்விடுத்தல்.

வாகாய்க்கருணைசெய்வேளானைக்கோட்டைவனைய்டம்வாழ் *
தோகாய்நின்மாளிகையெய்தவுங்கூடுமிச்சோலையிடம் *
ஏகாமன்மாமலர்கொய்தலையாமலெழிற்பதங்கள் *
நோகாமலுள்ளத்திலஞ்சாமற்செல்லுன்றனேனன்பதிக்கே. (கஅங)

இறைவியையெய்திப்பாங்கியுறைகாட்டல்.

மாவியல்சேர்ந்தகுகனைக்கோட்டைவனைக்கண்வளர் *
ஓவியமேயுன்விழிநகைசெங்கைக்குறுபகையாம் *
காவியம்போதிவைமுல்லைசெந்தாமரைக்கான்மிகவும்
தாவியநின்குழல்போல்வாசஞ்சேரிவைசண்பகமே. (கஅச)

இற்கொண்டேகல்.

தெருள்கொண்டகல்விதிகழானைக்கோட்டைநற்செய்வனைக்கண் *
அருள்கொண்டிலங்கியசேயிழையேயனைமார்கண்மிக *
இருள்கொண்டகாலமகல்வைகறைபினிலெண்ணியுன்னை *
மருள்கொண்டுதேடினுந்தேடுவர்செல்லுன்றன்வாழ்மனைக்கே. (கஅரு)

பிற்சென்றிறைவனைவரவுவிலக்கல்.

கனத்திற்பிறக்குமின்போல்வாளுங்கைக்கொடுகாவலசே *
தனத்திற்சிறந்ததிருவானைக்கோட்டைநற்சாமிவெற்பில் *
மனத்திற்றிகழ்கின்றவஞ்சியைத்தேடியிம்மையிருள்வாய் ( *
புனத்திற்றனித்துவரநினையேலெம்புரவலனே. (கஅசு)

பெருமகன்மயங்கல்.

திருந்திடுசெல்வத்திருவானைக்கோட்டைநற்சேய்தடத்தில் *
பொருந்திடுகன்னியும்யானுமின்பத்தைப்பொருந்தியுய்ய *
விருந்திடுவாரெனச்செய்தமின்னேயதின்மீட்டும்விட *
மருந்திடுவாரெனச்செய்யுபகாரமுமாற்றிலையே (கஅஎ)

தோழிதலைமகளை யாற்றுவித்தல்.

சீருற்றசெல்வனமசிவாயந்தொழுஞ்சேய்வரைக்கண் *
தேருற்றவேகப்பரிதூண்டிநின்னகர்சென்றிடலிக் *
காருற்றகங்குனெறியுன்னியுன்னிக்கலங்கியுங்கண் *
ணீருற்றிடுமென்கனிகேறக்காட்டன்பனீகுறியே. (க௮௮)

திருமகட்புணர்ந்தவன்சேறல்.

மதிலார்ந்தசோலைக்குகனைக்கோட்டைக்கென்மாதுமுகம் *
மதியாய்விளங்கினதெசெலத்தொண்டர்க்குவாழ்பரத்தில் *
கதியானதுமிகத்திற்செல்வமுந்தந்துகாக்குமிசை *
கதியாரணந்துதிக்குங்கார்த்திகேயர்தங்கல்லகத்தே (க௮௯)

இரவுக்குறிமுற்றிற்று.

## இரவுக்குறியிடையீடு

இறைவிக்கிருளையிறைவரவுணர்த்தல்.

நன்கார்முருகர்திருவானைக்கோட்டைநன்னகமதில் *
என்காரணங்கொறெரியேன்மயில்களெழுந்தெழுந்து *
மின்காரிடைகுழனேரனமேபுனமேய்ந்துலைந்தும் *
பின்காரிரவுந்துயின்றிலவேமதிபேதமுற்றே. (க௯௰)

தான்குறிமருண்டமை தலைவியவட்குணர்த்தல்.

வயலார்வளம்பலசேரானைக்கோட்டைமனுக்களின்மேல் *
இயலாப்பகைவர்துன்பெய்துதல்போற்குகனேந்தலின்கண் *
அயலாங்குறியைநங்கோமான்குறியென்றடைந்துமிக *
மயலாய்வருந்திவந்தேன்கயலார்விழிவாய்ந்தமின்னே. (க௯௧)

பாங்கிதலைவன்றீங்கெடுத்தியம்பல்.

பொற்பிற்சிறந்தகுகனைக்கோட்டைப்பொருப்பிடத்தில் *
வெற்பிற்சிறந்தமுலையன்னமேமுன்னமேவிநந்தம் *
கற்பைத்திரித்தவிதம்போலமன்னங்கருத்திலுற்ற *
வற்பைத்திரியக்குறியாக்குறிசொல்லிவைத்தனனே. (க௯௨)

புலந்தவன்போதல்.

பிழிமேவுபூங்குழற்கன்னியைநல்லறம்பேணுகின்ற *
மொழிமேவுசெல்வனமசிவாயஞ்சொன்முருகர்வெற்பில் *
வழிமேவிடாமன்மறைத்தெனைவாட்டியமான்மகனே *
பழிமேவிநீயும்படுவாயித்துன்பமிப்பார்தனிலே. (க௯௩)

புலர்ந்தபின்வறுங்களந்தலைவிகண்டிரங்கல்.

உழுவல்கொள்வேலர்திருவானைக்கோட்டைப்பொன்னேங்கலின்வாய்க் *
குழுவல்கொடார்தழைத்தோங்கியசோலையிற்கூர்புலைலத் *

தழுவல்கொள்பூஞ்சுனைநீங்கியுங்கொண்கர்தரித்தபிணை *
வழுவல்கொள்ளாதுகிடைத்ததென்றேமலர்ந்தாய்மனையே. (கசுச)

தலைவிதன்றுணைக்குரைத்தல்.

திணைபெற்றசெல்வனமசிவாயந்தொழச்சிந்தைமகிழ்ந் *
திணைபெற்றிடாநலமீய்ந்தருள்வேலவனோர்பொழிலில் *
துணைபெற்றிடாக்களவத்தொடைவேணெஞ்சிற்றேயவிடும் *
கணைபெற்றிடக்கண்டுவந்தேன்மின்போலிடைக்காரிகையே. (கசுரு)

தலைமகளவலம்பாங்கிதணித்தல்.

வஞ்சமில்லார்நல்லவாய்மையுள்ளார்மன்வழுத்துகுறி *
கொஞ்சமுமாறுவதில்லெனத்தேர்குயிலேமகிழ்ந்து *
தஞ்சமென்றோர்க்கருள்சீராணைக்கோட்டைநற்சாமிவெற்பில் *
கஞ்சங்கொண்முல்லைத்தொடையையக்காவினிற்கண்டிலமே. (கசுசு)

இறைவன்மேற்பாங்கிகுறிபிழைப்பேற்றல்.

அம்பதிவாழ்த்துங்குகனைக்கோட்டையணிவரைக்கண் *
எம்பதியெய்தமனமின்றித்துன்பத்திலெய்தவைத்தீர் *
றும்பதியாம்வரநேர்ந்தோமெங்கட்குநுவன்றிடும் *
தம்பதியீதென்றுமான்மதியீய்ந்திட்டதார்மன்னரோ. (கசுஎ)

இறைவிமேலிறைவன்குறிபிழைப்பேற்றல்.

நனவிற்கவிஞர்முன்னண்ணியென்மேற்பண்ணவிலுமென்று *
வினவிக்கருணைசெயுமாணைக்கோட்டைச்செவ்வேள்வரைக்கண் *
மனவிலுநற்கந்தரமானெனைமறந்தாலுமொரு *
கனவிலும்யான்மறவேன்முனைவேல்விழிக்காரிகையே. (கசுஅ)

அவள்குறிமருண்டமையவளவற்கியம்பல்.

பதியாளரசர்புகழாணைக்கோட்டைப்பகிக்குகனைத் *
துதியாதமாந்தர்வறிதுறல்போலவன்சோதிவெற்பில் *
திதியானமன்னவநின்குறிமாறித்திகைத்தலைந்து *
விதியாரைநொந்துவறிதாகவந்தனண்மென்கொடியே (கசுசு)

அவன்மொழிக்கொடுமைசென்றவளவட்கியம்பல்.

கரவின்மனத்துமின்னேயாணைக்கோட்டைக்கடம்பன்வெற்பில் *
பரவிநின்றார்க்கும்வியூகமுநீங்கிப்பரிவொடுநும் *
வரவினிற்சிந்தைவைத்திக்கானில்வந்துவருந்திநடு *
இரவினிற்சென்றனனென்றுநம்வேந்தரிசைத்தனரோ. (உ௱)

என்பிழைப்பன்றென்றிறைவிநோதல்.

நீதியிற்சார்ந்தகுகனைக்கோட்டைநன்னீர்வரையாய் *
சாதியிற்சேர்ந்தசருகுதிர்தோறுமென்றன்மனமவ் *

வீதியிற்சாரவைத்தேனவமேயன்பர்மேவியிராப் *
பாதியிற்சென்றனனொன்றுயென்பாவம்படைத்தனமே. (உ௱க)

தாய்துஞ்சாமை.

அறங்காக்கும்வேலர்திருவானைக்கோட்டையணிவரைக்கண் *
புறங்காக்குநன்னகருள்ளாருஞ்சேக்கையிற்புட்களுங்கூர் *
மறங்காக்குமாவிலங்குந்துயில்கொள்ளுமிம்மையிரவும் *
உறங்காதிருந்தனளேயன்னையேதுசெய்வோமணங்கே. (உ௱உ)

நாய்துஞ்சாமை.

அன்பானவேலர்திருவானைக்கோட்டையணிவரைக்கண் *
என்பாவமென்புகல்வேனிங்குமன்னரொய்தத்தடையாய்ப் *
பொன்பாவைபோலநந்தாய்மார்கடுஞ்சினும்பூங்கொடியே *
வன்பாதகச்சுணங்குங்குரைப்பானதுமாறிலவே. (உ௱ஙு)

ஊர்துஞ்சாமை.

தகரத்தடங்கொண்டுமாதர்களாடவர்தங்கள்புயச் *
சிகரத்தடல்செய்யுஞ்செய்கைகொண்டோநிதிசெந்தமிழைப் *
பகரத்தரும்புகழ்வேளானைக்கோட்டைப்பருப்பதத்தின் *
நகரத்தவருந்துயின்றிலரோயெழினன்னுதலே. (உ௱ச)

காவலர்கடுகுதல்.

தாய்விட்டசேயெனமின்னுடனதுவேந்தன்வரவில் *
ஆய்விட்டசிந்தைத்துயரறிந்தோதுடியந்தமிழ்க்கு *
மாயிட்டமானகுகனானைக்கோட்டைவரையிடத்தில் *
வாய்விட்டலறுகிறதூரின்காவலர்வன்மையுற்றே. (உ௱ரு)

நிலவுவெளிப்படுதல்.

கம்புலிம்மேகினிபோற்றானைக்கோட்டையிற்காலிகண்மே *
யும்புலினும்பெய்யும்வெண்சுதைபோற்குகனேங்கலின்கண் *
வெம்புலிலங்குஞ்சுடர்போனிலவும்விரித்தெழும்பி *
யம்புலியும்வந்ததன்பரெவ்வாறடைவரணங்கே. (உ௱சு)

கூகைகுழறுதல்.

தேட்டான்புிருந்ததிருவானைக்கோட்டைநற்சேய்தடத்தில் *
வாட்டானையில்வலங்கொண்டநங்கேழ்வரிம்மார்க்கம்வர *
மாட்டாரொன்றுண்ணினைந்தோநெஞ்சஞ்சோர்ந்திடவன்குரலால் *
கோட்டான்குழறத்துணிந்தனபூமலர்க்கூந்தன்மின்னே. (உ௱எ)

கோழிகுரற்காட்டுதல்.

அடியார்க்குஞ்செல்வத்திருவானைக்கோட்டையினுடவர்க்கும் *
மிடியாகுலத்தைவிலக்குநல்வேலவர்வெற்பிலவர் *

கொடியாயிருக்குங்குணம்வாரணங்களுங்கூவிபிரிந்த *
விடியாவிரவைக்குரலால்விரட்டினமென்கொடியே. (உ௱அ)

இரவுக்குறியிடையீடுமுற்றிற்று

## வரைதல்வேட்கை.

தலைமகளைப்பாங்கிபருவரல்வினவல்.

குணங்கொண்டசெல்வத்திருவானைக்கோட்டைக்குமரர்வெற்பில் *
சுணங்குகொண்டார்ந்ததுணைமுலையாயுன்றன்றோழியர்கள் *
இணங்கலில்லாமுனிவோவனைமார்பிணக்கேதுமுண்டோ *
உணங்கியகாரணமேதுரைப்பாய்நெஞ்சத்தூடுற்றதே. (உ௱கூ)

அருமறைச்செவிலியறிந்தமைகூறல்.

உச்சங்கொள்வேலர்திருவானைக்கோட்டைப்பொன்னேங்கலின்வாய் *
குச்சமில்லாமதிமானேயென்சொல்லநங்கொண்கரிங்கே *
கச்சம்புனைகொங்கைமேவித்தணந்தெய்தக்கண்டுவெட்கி *
யச்சங்கொண்டேனதினங்களவாயுமறிந்தனளே. (உ௱ய)

தலைமகன்வருந்தொழிற்கருமைசாற்றல்.

மாதாவிவ்வூரவர்துஞ்சினுங்காவலர்வாய்ந்திடுமோர் *
போதாயினுந்துயிலார்பதிபாலெனப்போந்ததருள் *
தாதாவென்போர்க்கருள்சேயானைக்கோட்டைக்கடங்கிரியில் *
சேதார்ந்தசூட்டுப்புள்வாயடையாதென்றிகைப்பறிந்தே. (உகக)

தலைமகனூர்க்குச்செலவொருப்படுதல்.

மேதகஞ்சேர்ந்ததிருவானைக்கோட்டைச்செவ்வேள்வரைக்கண் *
சேதகஞ்சேர்கனிவாயமுதுண்டுதிதிமறந்த *
பாதகர்வாழம்பதியைவினவிப்படர்குவமோ *
பீதகம்போலும்பிறங்கியமேனிகொள்பெண்கொடியே. (உகஉ)

பாங்கியிறைவனைப்பழித்தல்.

சேமஞ்சுகந்தருஞ்சேயானைக்கோட்டைச்சிலம்பிடத்தில் *
காமஞ்சுரந்திடலாடவர்மாதர்கள்கால்பிடித்தும் *
ஏமஞ்சுரக்குமுலைபிடிப்பாரின்பமேகிடிலோ *
தாமஞ்சுருள்பிடிப்பாரென்றசொன்னந்தலைவர்மட்டே. (உகரு)

இறைவியிறையோன்றன்னைநேர்ந்தியற்படமொழிதல்.

தீராதகாதற்பசப்பூர்ந்தமேனியெச்செய்கையிலும் *
ஊராதநெஞ்சம்பிறவுமின்னேமணமூர்குவளைத் *
தாரார்ந்தமன்னனமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பர் *
தேராதிருப்பதுவேறல்லநாஞ்செய்ததீவினையே. (உகச)

சுனவுநலிபுரைத்தல்.

குறையாதசெல்வம்பெறுமானைக்கோட்டைக்குமரர்வெற்பில் *
உறையாத்துயில்வந்தடையவெம்பாலினிலுள்ளமகிழ்ந் *
திறையானவரும்வரவாரணங்களிரைந்துபடர் *
சிறையாற்புடைத்துமனநோவவுந்துயர்செய்கின்றவே. (௨௧௫)

கவினழிபுரைத்தல்.

வென்றிகொள்செல்வனமசிவாயந்தொழும்வேள்கடவுள் *
அன்றென்பவர்நலந்தேய்வதுபோலென்னழகுமின்னே *
குன்றுதலுற்றமெய்நோய்தன்னைநீயும்வன்கொற்றவனும் *
ஒன்றுமறிகின்றிலீரறியாததென்னூழ்வினையே. (௨௧௬)

தன்றுயர்தலைவற்குணர்த்தல்வேண்டல்.

திகழுநற்செல்வனமசிவாயந்தொழுஞ்சேய்வரைச்கண் *
இகழ்தலில்லாதவிளமயிலேயெனக்கிவ்வண்ணமாய் *
நிகழுந்துயரன்பருக்கெவரோனுநிகழ்த்துவரேல் *
புகழுண்டவர்க்குமென்க்குயிர்வாழ்வும்பொருந்திடுமே. (௨௧௭)

துன்புறுபாங்கிசொல்லெனச்சொல்லல்.

படருமென்றுன்பவர்பாலுரைபாலுரைப்பாங்கியென்றே *
யிடருறுமென்னிடஞ்சொல்லியென்பேறுநல்லின்பசெல்வம் *
தொடருந்தொழும்பர்க்கருளானைக்கோட்டைச்சுவாமிவெற்பர் *
அடருந்துணைமுலையாயுன்றனேவறியாரல்லரோ. (௨௧௮)

அலர்பார்த்துற்றவச்சக்கிளவி

வையம்புகழுங்குகனானைக்கோட்டைவரையிடத்தில் *
ஐயம்புகலிடைமின்னார்கள்வாயம்பலருமதன் *
கையம்புபாயநற்காரிகையேயென்கயல்விழிகள் *
பெய்யம்புமாறலரிதேமைக்கங்குற்பெயரினுமே. (௨௧௯)

ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி.

வல்லியமார்க்குமிம்மார்க்கஞ்சென்மன்னவர்க்குத்துணையாய் *
எல்லியம்போதுதுணையாகச்செல்கின்றதென்மனஞ்சீர் *
புல்லியபாவலர்க்கின்னலைத்தீர்த்துநற்பொன்சிறக்க *
நல்லியல்பாயருள்வேளானைக்கோட்டைநன்னகத்திலே. (௨௨௰)

காமமிகக்கழிபடர்கிளவி

குருகுகளேபசுங்கிள்ளைகளேமதிகூர்ந்துவெண்பால் *
பருகுசெவ்வாயுறுமன்னங்களேதொண்டர்பாலிலன்பு *
பெருகுநல்வேலர்திருவானைக்கோட்டைப்பிறங்கலின்வாய் *
உருகுமென்னன்பனைக்காணுதென்னுள்ளமுலைகின்றதே. (௨௨௧)

தன்னுட்கையாறெய்திடுகிளவி.

தண்டிகையோகனமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பில் *
பண்டினிவாயணேந்தார்வருவாரவர்பண்பையெல்லாம் *
கண்டினங்கூடிமகிழ்வாயென்றென்னுட்கவலேயற *
வண்டினமேசொல்லுமெற்கொருவாசகம்வாய்திறந்தே. (௨௨௨)

நெறிவிலக்குவித்தல்.

மங்குலேநேர்குழலாயானேக்கோட்டையில்வாழ்மடவார் *
தங்குழல்போலுங்குமரோசர்பாதந்தனேமறந்த *
மங்கியமாந்தர்மனம்போலுமையிருள்வாய்ந்தவிந்தக் *
கங்குலிலின்னெறிவாரலென்றேசொல்லென்காதலர்க்கே. (௨௨௩)

குறிவிலக்குவித்தல்.

சினேவிளேவானதிருவானேக்கோட்டைநற்சேய்தடத்தாய் *
நனேவிளேவானவிக்காவிலல்வாய்நணுகேலினமும் *
தினேவிளேவானதென்செல்வியைக்காக்கச்செலுத்துவனென் *
றனேவிழைவாயுரைத்தாளென்றுசொல்லெனதன்பருக்கே. (௨௨௪)

வெறிவிலக்குவித்தல்.

சேமப்பொருள்வளர்சீரானேக்கோட்டைநற்சேய்வரைக்கண் *
சாமப்பொழுதில்வெறியாடல்செய்திடச்சாற்றினளாய் *
வாமப்புயமன்னர்முன்னளிலென்னேமணந்துதந்த *
காமப்பிணிதணிக்கும்பொருட்டாகவென்காரிகையே. (௨௨௫)

பிறவிலக்குவித்தல்.

விதுப்புகழ்ந்தேத்துதிருவானேக்கோட்டைச்செவ்வேள்வரைக்கண் *
கதுப்பின்மதம்பொழிவேழத்தின்மீதிற்கனகமொடு *
மதுப்பயில்பூங்குழன்மானேசிலர்கள்வந்தார்களென்ன *
வெதுப்பியவேலினேயூடெய்தல்போன்றதென்மென்செவிக்கே. (௨௨௬)

குரவரைவரைவெதிர்கொள்ளுவித்தல்.

தலத்திற்சிறந்ததிருவானேக்கோட்டைநற்சாமிவெற்பில் *
நலத்துக்குரியநின்சொற்கடவார்நமர்நாடியவர் *
புலத்துக்கிணங்கவிப்போதேயிச்செய்கைபுகறலேயேல் *
குலத்துக்கிழிவன்றிநம்முயிர்க்கேதமுங்கூடுமின்னே. (௨௨௭)

வரைதல்வேட்கைமுற்றிற்று.

## வரைவுகடாதல்.

வினவியசெவிலிக்குமறைத்தமைவிளம்பல்.

திரையெனச்செல்வம்பெறுமானைக்கோட்டைநற்சேயின்வெற்பா *
வரையெனக்கொங்கைபுடைத்திடைதேய்வதென்மான்விழியாட் *
குரையெனக்கேட்டவனைக்கோர்மொழிமறைத்தோதினன்று *
மரையெனச்சொன்முகமாதுமென்றேவியும்வாழவென்றே. (உஉஅ)

அலரறிவுறுத்தல்

மலர்மிகுசோலைக்குகனானைக்கோட்டையில்வாய்ந்தவெற்பா *
சிலரறிசிற்றநம்பானதுமீறித்தினந்தினமும் *
பலரறியும்படிபூத்தனமாலைக்குப்பக்குவமாம் *
அலரொடுப்பாயுன்புயமலைசேர்கொடியையணைந்தே. (உஉகூ)

தாயறிவுணர்த்தல.

செய்யிற்கமலமலரானைக்கோட்டைத்திருந்திழையார் *
மையிற்பழகுகண்ணுலன்பர்நெஞ்சறிமாண்பதுபோல் *
கையிற்பொருந்தியவேலர்வெற்பாநந்தங்கன்னிதிரு *
மெய்யிற்களவையெல்லாமறிந்தாண்மதிமேவனையே. (உஙய)

வெறியச்சுறுத்தல்.

செறியாடகந்திகழ்சீரானைக்கோட்டைநற்சேய்வரைக்கண் *
பொறியாடரவல்குற்பெண்மயலானதைப்பூவுலகில் *
நெறியாடவர்புகழ்மன்னநீமாற்றநினைந்திலையால் *
வெறியாடல்செய்யநல்லாயமுந்தாய்களுமேவினரோ. (உஙக)

பிறர்வரைவுணர்த்தல்.

தொடைக்காயிரம்பொன்தருமானைக்கோட்டைச்சுவாமியயிற் *
படைக்காயிரம்விதம்பாடுமன்பாவெங்கள்பைங்கிளிதன் *
இடைக்காயிரமொழிக்கீராயிரம்விழிக்கெண்மடங்கு *
நடைக்காயிரமுலைக்கோமாலைபோற்பொன்னைநல்குவரோ. (உஙஉ)

வரைவெதிர்வுணர்த்தல்.

சுசிதனினல்லதிருவானைக்கோட்டைச்சுவாமிவெற்பா *
நிசுதனிற்சார்ந்தகுறிவந்தென்பேறெங்கணீணகருக் *
குசிதநல்வேதியரோடெய்தினின்சொற்குவப்பொமர் *
சசிதனைக்கண்டுமலராக்குமுதமுந்தானிலையே. (உஙங)

வரையுநாளுணர்த்தல்.

தள்ளாமற்செந்தமிழைத்தினங்கேட்டுத்தனங்கொடுக்கும் *
உள்ளார்ந்தவேலர்திருவானைக்கோட்டைநல்லோங்கலின்கண் *
கள்ளார்ந்தபூங்குழல்வாணுதல்போன்முன்கலைபொருந்திப் *
புள்ளார்க்கவேங்கையும்பூத்தனபாரொம்புரவலனே. (உஙச)

அறிவறிவுறுத்தல்.

தென்னையங்காவளர்சீரானைக்கோட்டைநற்சேய்வரைக்கண் *
மின்னையோப்பாமிடைமான்விழியாண்மிகவெட்கமுற்றுத் *
தன்னைக்குறைசொல்வன்யானெனத்தேர்ந்துதகவுமன்றூ *
என்னைமறைத்தனணீசெய்தகுற்றமெல்லாம்பொறுத்தே. (உருரு)

குறிபெயர்த்திடுதல்.

சில்வேளையிங்கர்மாந்தரிங்கேய்வர்தினமவைக்கு *
நல்வேளையாகச்செய்வேளானைக்கோட்டைநன்றாகமதில் *
எல்வேளைவேறெருசோலையிலேந்திழையின்றெடும்போய் *
வில்வேளைநேர்மன்னவாவிளையாடுகமேவிநின்றே. (உரு௬)

பகல்வருவானையிரவுவருகென்றல்.

மருங்குனுடங்கவனம்போனடந்தருள்வாய்க்கநன்மை *
தருங்குமரேசனாச்சீரானைக்கோட்டைநற்றையலர்நெஞ் *
சொருங்குடன்போற்றுங்கரம்போற்கமலங்களொப்பவரும் *
கருங்குலக்கங்குறனில்வருவாயயிற்காவலனே. (உருஎ)

இரவுவருவானைப்பகல்வருகென்றல்.

சோதிக்கனகமிகுமானைக்கோட்டைவேள்சொற்கவிஞர் *
நீதிக்குரியநமசிவாயச்செல்வனீண்மரபோர் *
மீதிற்கருணைவிளங்குதல்போற்கதிர்மேவிவரும் *
போதிற்றலைவநீவாபுனங்காக்குமென்பொற்கொடியே. (உருஅ)

பகலினுமிரவினும்பயின்றுவருகென்றல்.

இகலும்பகைபிணிவென்றானைக்கோட்டையிலேய்ந்துகவி *
புகலுங்கவிஞரிருமையுஞ்செல்வம்பொருந்தியுய்ய *
மிகலுங்கருணைசெயுங்குமரேசர்நலவெற்பிடத்தில் *
பகலுமிரவும்வரவேண்டுமென்னவபண்புடனே. (உருகூ)

பகலினுமிரவினுமகலிவணென்றல்.

சசியுங்கமலமுநேர்முகவள்ளிக்குந்தன்கணவர் *
வசியும்பெறுமயிலாரானைக்கோட்டையில்வந்ததொண்டர்க் *
கசியும்பிணியுந்தவிர்கருஞ்செவ்வேளணியார்வரைக்கண் *
நிசியும்பகலுமிக்காவில்வராதகனீடன்பனே. (உ௬ய)

உரவோனாடுமுருங்குலனுமரபும்புகழும்வாய்மையுங்கூறல்.

விண்புக்குநீடியவேளானைக்கோட்டைநல்வெற்பிடத்தில் *
மண்புக்குமன்னியசீர்கொணின்னாட்டுக்குமாநகர்க்கும் *
பண்புக்குநல்லகுலமரபிற்கும்பகருமெய்க்கும் *
நண்பிற்குநன்றலநீவரையாதுநடப்பதுவே. (உ௬க)

ஆறுபார்த்துற்றவச்சங்கூறல்.

முதலைகொணீர்ச்சுழியுந்தியுந்தாவிமுற்றுதவிளம் *
திதலைகொள்கொங்கையந்தேன்மொழிக்காய்மன்னதேர்ந்துநின ம் *
மதலையும்போற்றுங்குகனைக்கோட்டையில்வாழ்முருகர் *
பதலையுற்றாரிருள்சேர்நெறிநீவரல்பண்பலவே (உ௪உ)

ஆற்றாத்தன்மையாற்றக்கூறல்

வாடுங்கலையும்வளைகளுஞ்சோர்ந்துமயங்கியுன்னைத் *
தேடும்புலம்புந்திகைக்குந்தெளியுஞ்சிறந்தநன்மை *
நீடுங்குமரர்திருவானைக்கோட்டைநன்னீர்வரைக்கண் *
பாடுஞ்சுரும்புமொய்மாலைமொய்ம்பாவெங்கள்பைங்கிளியே. (உ௪௩)

காவன்மிகவுரைத்தல்

வாவலுற்றாக்கும்வரிவேங்கைசூழிந்தமையிருளில் *
ஆவல்கொண்டிங்கடையேனிதமுந்தமிழ்க்கம்பொன்மிகப் *
பாவலர்பாலருள்வேளானைக்கோட்டைப்பருப்பதத்தில் *
காவலர்துஞ்சினுந்தாய்துயிலாண்மதிக்காவலனே. (உ௪௪)

காமமிகவுரைத்தல்.

செயமேவுசெல்வனமசிவாயந்தொழுஞ்சேயருளே *
வயமேவுதொண்டருக்காதாரமாகியவண்மையைப்போல் *
கயமேவுதாமரைக்கையாள்வெங்காமக்கனலினுக்குன் *
புயமேநன்னீரன்றிவேறுளதாமன்னபூமியிலே. (உ௪௫)

கனவுநலிபுரைத்தல்.

செருவினைமாற்றுங்குகனைக்கோட்டைத்திருவெற்பநீ *
மருவினதாகக்கனவினிற்கண்ணுற்றுவாய்ந்ததுயில் *
ஒருவினளுள்ளமூலந்தனணெட்டுயிர்த்துன்னையெங்கும் *
துருவினள்போதங்கலங்கிப்புலம்பியென்சுந்தரியே. (உ௪௬)

கவினழிபுரைத்தல்.

நிசந்தங்குவேலர்திருவானைக்கோட்டைநன்னீர்வரைக்கண் *
துசந்தங்குமன்னவநின்பொருட்டாகவென்றேகையின்மெய் *
பசந்தனகொங்கைபருத்திடைவாடினபாலொடுதேன் *
கசந்தனவென்றருந்தாண்மிகக்கூர்ந்தகவின்றுறந்தே. (உ௪௭)

வரைவுகடாதன்முற்றிற்று.

## ஒருவழித்தணத்தல்

தன்பதிக்ககற்சிதலைவன்சாற்றல்.

கொந்துலவும்பொழில்சேரானைக்கோட்டைக்குகன்வளைக்கண்
செந்துவர்முத்தந்திகழுமென்மாநகர்சென்றதன்பின்
வந்துநம்பொன்னைமணம்புரிவேனதுமட்டுமின்னே
நொந்துளஞ்சோர்ந்துமெய்வாடாமற்காப்பதுநுங்கடனே. (௨௪௮)

பாங்கிவிலக்கல்.

வாராதிருந்துகொள்வாயுன்றனுடுறில்வாவுமளத்
தேரார்புரவிசெலுத்தேல்கவிஞர்க்குச்சிந்தைமகிழ்ந்
தோராயிரம்பொன்னொருகவிக்கீயுமுதாரமனச்
சீரார்ந்தமன்னனமசிவாயந்தொழுஞ்சேய்தடத்தே. (௨௪௯)

தலைவனீங்கல்வேண்டல்

முற்றுமுலைக்கன்னியைத்தனியாய்மயலுழக்கவைத்துச்
சற்றுகிலுமறவேனானைக்கோட்டைத்தலத்திலுற்று
வற்றாத்தடஞ்செந்நெற்செல்வமுநோக்கிவருகுவனோர்
நற்றாரணிந்தவடிவேலர்பூம்பொழினுகமின்னே. (௨௫௰)

பாங்கிவிடுத்தல்.

கொடுத்திடுமென்புபிரியாமனுளுமென்றேகையைக்கை
விடுத்திடச்சற்றுநினையாமற்பாவலர்மிச்சைதனைத்
தடுத்திடுமன்னனமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பில்
அடுத்தடுத்திங்குவரவேண்டும்பேரொழிலாண்டகையே. (௨௫௧)

பாங்கிதலைவிக்கவன்செலவுணர்த்தல்.

நன்றனசத்திரம்வைத்தானைக்கோட்டையினுவலர்க்கும்
என்றுநன்றுயனம்பாலுடனூட்டியில்லாமையற
வென்றநற்கன்னனமசிவாயந்தொழும்வேள்வளையாய்
சென்றனரன்பர்வருவேனெனத்தன்றிருநகர்க்கே. (௨௫௨)

தலைவிநெஞ்சொடுபுலத்தல்.

ஓங்கியசீரருள்சேயானைக்கோட்டைநல்லோங்கலின்வாய்
ஏங்கினர்முன்வந்திசைந்ததன்பின்கொங்கையின்பமுண்டு
தாங்கினராவிதழைத்தனநாமுந்தனிக்கவின்று
நீங்கினர்நம்மன்னர்போற்கொடியோரில்லைநெஞ்சகமே (௨௫௩)

சென்றோனீடலிற்காமமிக்ககழிபடர்கிளவி.

அருத்தத்தைநல்கிப்புலவோர்க்ககஞ்செய்தருளிமனத்
திருத்தத்தைச்செய்யுநமசிவாயந்தொழுஞ்சேய்தடத்தில்
பொருத்தத்தைநீங்கியகாதலர்பாலிற்புலம்புமென்றன்
வருத்தத்தைச்சொல்லுநற்செவ்வாய்மருதமரத்தத்தையே. (௨௫௪)

தலைவியைப்பாங்கியாற்றுவித்தல்.

பார்ப்போநங்கொணகர்வருநெறியாய்ந்தவர்பண்புரைத்துத் *
தீர்ப்போநம்மையலம்மன்னவர்காவினிற்றிண்மதிலில் *
கார்ப்பொந்துலாவுந்திருவானைக்கோட்டைக்கடம்பன்வெற்பில் *
சேர்ப்போமலர்கோய்துகூந்தலில்வாதிருச்சேயிழையே. (உருரு)

தலைவன்வந்தமைபாங்கியுணர்த்தல்.

அந்தனங்கொண்டபசலையும்வேள்விடும்புதைத்து *
நொந்தநின்னுள்ளக்கலக்கமுந்தீர்ந்திடநோன்மைதங்கு *
சந்தனக்காவளர்சீரானைக்கோட்டைநற்சாமிவெற்பில் *
வந்தனரன்றுதன்னூர்சென்றகாதலர்மாதரசே. (உரு௬)

பாங்கிதலைவனொடுநொந்துவினாதல்

இத்தனையோவுனதன்புமன்னாபிரிந்திட்டதையெள் *
ளத்தனைபோலுநினைந்ததில்லென்றுதுன்பார்ந்துருகிக் *
கத்தனைமன்னனமசிவாயந்தொழுங்கந்தனைமின் *
எத்தனையோசொல்லிப்போற்றினளீயிவணெய்திடவே. (உருஎ)

தலைவன்பாங்கியொடுநொந்துவினாதல்.

மயலார்மதமுண்விளங்கனிபோலவருந்தியென்போல் *
கயலார்விழியிரெவ்வாறிருந்தீர்கல்விக்கார்கனகப் *
புயலானவேலர்திருவானைக்கோட்டைநற்பூதரத்தில் *
அயலார்நகையுமதவேள்பகையுமடைந்துடைந்தே. (உருஅ)

தலைவியையாற்றுவித்திருந்தவருமைகூறல்.

மாவொன்றுசெல்வத்திருவானைக்கோட்டையில்வாழ்பவனைப் *
பாவொன்றுவாணனாவேலவர்காத்தருள்பான்மையைப்போல் *
ஏவென்றகண்ணியையான்புரந்தேனுயிரொன்னவன்னாள் *
காவென்றுநீசொன்னசொற்கடவாமலென்காவலனே. (உரு௯)

ஒருவழித்தணத்தன்முற்றிற்று.

## வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிதல்.

என்பொருட்பிரிவுணர்த்தேந்திழைக்கென்றல்.

நென்மாக்கதலிவளரானைக்கோட்டையினேர்முகில்கள் *
பொன்மாரிபெய்யவருவதுபோற்குகன்பூந்தடத்தில் *
நன்மாநகரொய்திவேட்டற்பொருள்கொண்டுநான்வருவேன் *
என்மானிடத்திற்புகல்வாய்மின்போலிடையேந்திழையே. (உ௬0)

நின்பொருட்பிரிவுரைநீயவட்கென்றல்

அருந்துஞ்சுவையில்விடங்கலந்தாலெனவன்பநின்சொல் *
முருந்துறழ்வெண்ணகையாண்மாட்டியான்மொழியேனிதிசேர் *

பொருந்துங்குமரர்திருவானைக்கோட்டைப்பொருப்பிடத்தில் *
திருந்தும்படிக்குன்றன்செய்தியைச்சொல்லிப்பின்செல்லனன்றே. (உகூக)

நீடேனென்றவனீங்கல்

நடையுநல்வேகமுஞ்சேர்பரித்தேரைநடத்திவெய்யோன் *
அடையும்பொழுதுக்குளென்னகர்சேர்ந்திங்கடைகுவன்பூந் *
தொடையுங்கொள்செல்வத்திருவானைக்கோட்டைச்சுவாமிவெற்பில் *
இடையுந்துடையுமின்வாழையையொப்பானவிளங்குயிலே. (உகூஉ)

பாங்கிதலைவிக்கவன்செலவுணர்த்தல்.

பணம்பெறநம்மினத்தாவிருப்பானதைப்பார்த்துவனம் *
கணம்பெறுகல்லதருங்கடந்தார்தனங்கைக்கொடன்பர் *
குணம்பெறச்செய்யுந்திருவானைக்கோட்டைக்குமரர்வெற்பில் *
மணம்பெறநாளைவருவனென்றேமன்னர்மாமயிலே. (உகூங)

தலைவியிரங்கல்.

உரைத்தாரினியுன்னையான்மறவேனென்றென்னுள்ளமதைக் *
கரைத்தார்கலந்துமகிழ்ந்தாரொதிருப்பகாரமென்றே *
விரைத்தாரணிந்தகுகனானைக்கோட்டைநல்வெற்பிடத்தில் *
நிரைத்தாரணிகுழலாய்புகலாதன்பர்நீங்கினதே. (உகூச)

பாங்கிகொடுஞ்சொற்சொல்லல்..

ஆறுமுகங்கொண்டதுமானைக்கோட்டைக்கென்னப்பன்குகன் *
தேறுமுகங்கொண்டுவந்ததுந்தொண்டர்திறமதுபோல் *
மாறுமுகங்கொண்டழுங்குவதேன்மயிலேமன்னவர் *
வேறுமுகங்கொண்டதுன்காரணமன்றிவேறில்லையே. (உகூரு)

தலைவிகொடுஞ்சொற்சொல்லல்.

புள்ளும்புசித்திடநீரற்றகான்வழிபொற்புமன்னர் *
முள்ளும்பரலும்வருத்தச்சென்றாரதைமுற்றுணர்ந்தும் *
தெள்ளுந்தமிழ்வளர்சீரானைக்கோட்டைநற்சேய்தடத்தில் *
விள்ளுமிவ்வூருள்ளிரங்காதென்பாற்பலமேன்மைநன்றே. (உகூகூ)

வருகுவர்மீண்டெனப்பாங்கிவலித்தல்.

மூவியியற்செந்தமிழாரீழநாடுமுதலெங்கணும் *
தாவியசீர்மன்னமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பில் *
ஆவியைக்காத்துத்தகைதீர்க்குநின்னிதழாமமுத *
வாவியைக்கண்டபின்னீங்குவரோவன்பர்வாணுதலே (உகூஎ)

பருவங்கண்டுபெருமகள்புலம்பல்.

சீர்பொழிந்தோங்குதிருவானைக்கோட்டைநற்சேய்வரைக்கண் *
நீர்பொழிகண்ணுந்துயர்நெஞ்சுந்தந்தன்பர்நீத்தனரோ *

கார்பொழியப்பெடையோடுபைங்தோகைகளித்துலவும் *
சார்பொழிறன் னின்மயல்யானெவ்வாறுசகிப்பதுவே. (உசுஅ)

இருளைவம்பென்றல்.

நூலோர்ந்திடுந்தமைவென்றிடும்பேர்க்கொருநோவுறுங்கால் *
மேலோருதவிசெய்வாரானைக்கோட்டைவேள்வெற்பிலது *
போலோடினவன்றுன்சாயற்குத்தோற்றின்றுபூங்கொடிநீ *
மாலோடுறுந்துயர்கண்டாடுகின்றனமஞ்ஞைகளே. (உசுசு)

இறைமகண்மறுத்தல்.

சந்திரசேகரர்கேள்விக்கன்ஞளிற்றனிக்குடிலை *
மந்திரம்போதித்தசேயானைக்கோட்டைவரையின்மின்னே *
இந்திரகோபமுஞ்சாபமுங்காட்டியென்னெஞ்சமஞ்ச *
வந்திரவிக்கதிர்தோன்றுமற்சூழ்ந்தனவான்முகிலே. (உஎ0)

அவர் தூதாகிவந்தடைந்ததிப்பொழுதெனத்துணைவிசாற்றல்.

உருவெளைனுநன்னம்சிவாயங்கருத்தோர்ந்துகுகன் *
பெருவேட்கையாகவந்தென்ஞளுமுன் னின்றுபேணுதல்போல் *
திருவேங்கர்நம்மயில்சோருமென்றுளந்தேர்ந்தொல்லையில் *
வருவேனெனவன்பர்முன்விட்டதூதிந்தமங்குன்மின்னே. (உஎக)

தலைமகளாற்றல்.

உடலிரண்டோருயிரொன்றுண்மைபேசியுவந்தணைந்த *
மடல்விரிதாரன்பராதலினெம்மனத்துயரை *
விடனலதித்துன்பவருங்கொள்வார்சுரர்மேவலரை *
அடல்கொண்டவேலர்திருவானைக்கோட்டையசலத்திலே. (உஎஉ)

அவனவட்புலம்பல்.

வண்ணீர்மைகொண்டகுகனானைக்கோட்டைவரையிடத்தில் *
பெண்ணீர்மைகுன்றிக்கலைமதிசோர்ந்துபெருமுலைமேல் *
கண்ணீரொழுகநமைத்தேடிவாடியகன்னிநெஞ்சே *
தண்ணீர்மைசேரன்பிதோவெனக்கேட்கிலென்சாற்றுவதே. (உஎங)

பாகனேடுசொல்லல்.

மாலைக்குமுன்னும்வருமானைக்கோட்டைமயின்முருகர் *
சோலைக்குமுன்கண்டதோகைக்குமுன்னந்தத்தோகையஞ்சும் *
வேலைக்குமுன்னென்மனத்துக்குமுன்கதிர்வெற்படையும் *
காலைக்குமுன்னம்வலவாநந்தேரைக்கடாவுவையே. (உஎச)

மேகத்தொடுசொல்லல்.

முழுநலமார்ந்ததிருவானைக்கோட்டைமுருகர்பதம் *
தொழுநலமாவென்றணங்குங்கல்ங்குந்துயிலணையில் *

விழுமுகம்வாடுமயல்கொள்ளும்யான்வரும்வேட்கைதன்னை *
யெழுமுகில்காள்செல்லுவீர்சொல்லுவீரெனதேந்திழைக்கே, (உஎரு)

பாங்கிவலம்புரிகேட்டவன்வரவறிவுறுத்தல்.

நலம்புரிவேலர்திருவானைக்கோட்டைநன்னகமதில் *
கலம்புரிநூலிடைக்கன்னிகையேசென்றகாதலர்நற் *
பொலம்புரித்தேர்மிசைவந்தனர்காமர்பொருந்தியவெண் *
வலம்புரியார்த்தனநாளுநன்னெஞ்சமகிழ்ந்திடவே. (உஎசு)

வலம்புரிகிழத்திவாழ்த்தல்.

சங்கந்துதிக்குங்குகன்மீதிற்கோவைதனைச்சொலப்பொன் *
சங்கங்கொடுத்தநமசிவாயச்செல்வன்றன்புகழ்போல் *
சங்கந்தரளந்திகழ்ரதமேவுந்தலைவர்நன்வெண் *
சங்கந்தழைத்தென்றும்வாழியவோங்கிவையந்தனிலே. (உஎஎ)

தலைவன்வந்துழிப்பாங்கிநினைத்தமைவினவல்

சந்தித்தமன்னபொருட்காய்ப்பிரிந்தயல்சார்ந்தவுழி *
சிந்தித்திருப்பதுண்டோவுரையாய்தினஞ்செந்தமிழோர் *
வந்தித்துப்போற்றுந்திருவானைக்கோட்டையில்வாழ்முருகர் *
உந்தித்திகழ்வரைவாழெங்கண்மாதினையுள்ளத்திலே. (உஎஅ)

தலைவனினைத்தமைசெப்பல்.

இந்தினைநேர்முகமாதைப்பிரிந்தொரிறைப்பொழுதும் *
சிந்தனைதன்னின்மறந்தறியேனங்குசேயிழையே *
கந்தனையோகனமசிவாயந்தினங்கைகுவித்து *
வந்தனைசெய்துமறவாதிருக்குமகிமையொத்தே. (உஎகூ)

பாங்கிதலைவியையாற்றுவித்திருந்தமைகூறல்.

தலங்காக்குமன்னர்புகழானைக்கோட்டைநற்சாமிவெற்பில் *
வலங்காக்கும்வேன்மன்னநீயிங்ககன்றபின்மாமயிலைப் *
பொலங்கான்றமேனியயராமலெங்கும்புகாமலஞ்சிக் *
கலங்காமலாற்றுவித்தேனெஞ்சந்தேற்றிக்களிப்புறவே. (உஅ0)

வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிதன்முற்றிற்று.

## வரைவுமலிவு.

காதலன்முலைவிலைவிடுத்தமைபாங்கிகாதலிக்குணர்த்தல்.

செங்கைக்குப்பொன்வளைசேர்மயிலேயன்பர்தேடியுன்றன் *
கொங்கைக்குப்பொன்விலையாயள்ளித்தந்தனர்கூர்கவிஞர் *
அங்கைக்குப்பொன்வளையாரமுஞ்சீருமளித்திடுமான் *
மங்கைக்குப்பொன்னன்பராமானைக்கோட்டைவேண்மாதிரத்தே. (உஅக)

காதலிநற்றுயுள்ளமகிழ்ச்சியுள்ளல்.

முருகுயர்காவளர்வேளானைக்கோட்டைமுதுநகரில் *
பெருகியமாந்தர்தமமைந்தர்க்குமன்றல்பெருகிடச்செய் *
தருமினிலுற்றுமகிழ்வதுபோற்கொண்கராய்ந்துநம்மூர் *
வருகுவரோன்மணஞ்செய்தன்னைநம்மின்மகிழுவளே. (உஅஉ)

பாங்கிதமர்வரைவெதிர்ந்தமைதலைவிக்குணர்த்தல்

தென்றலுலாவுந்திருவானைக்கோட்டையிற்சேர்மனுக்கள் *
மன்றற்கரைவிசகும்பேரிகைபோற்குகன்மாதிரத்தாய் *
நின்றனப்பிரகலக்கொண்கர்க்கேமணநேர்ந்துநலம் *
ஒன்றவெங்கெங்குமுரசறைந்தார்நமருண்மகிழ்ந்தே. (உஅரு)

தலைமகளுவகையாற்றுதுளத்தொடுகிளத்தல்.

துன்புறுமென்றன்மனமேயிரவெனுந்தூங்கலையாம் *
அன்புறுங்காதலராம்பாகரோடணையார்ந்துநலம் *
இன்புறும்வேலர்திருவானைக்கோட்டைநல்லேந்தலின்கண் *
வன்புறுமெல்லுதையத்தோட்டிகாட்டிமடக்குதுமே. (உஅச)

தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.

விழிமொழிவாணறைமின்னெடும்வாழியமேவியம்பல் *
பொழிமொழியாமங்கிக்கம்பாகமன்னநின்பொன்மணநல் *
வழிமொழிவோர்க்கருள்வேளானைக்கோட்டைவள்க்கண்வலஞ் *
சுழிமொழிசங்கத்தொனிகாட்டுநீயன்றுசூட்டலரே. (உஅரு)

தலைவிமணம்பொருட்டாகவணங்கைப்பராநிலைகாட்டல்.

குணங்கிளர்பாவலர்சீரானைக்கோட்டைக்குமரரொழில் *
மணங்கிளர்பூம்பதம்வேண்டுதல்போலவர்மாநிரம்வாழ் *
அணங்கினைநின்பொருட்டாகநம்மங்கையன்பாகநின்று *
வணங்கித்தனிவரம்வேண்டுதல்பார்செயமன்னவனே. (உஅசு)

பராநிலைகண்டதலைமகன்மகிழ்தல்.

இவ்வண்ணங்கன்னிக்குநன்மணநேர்ந்தணங்கோர்பதத்தில் *
செவ்வண்ணமானமலர்தூவிப்போற்றுஞ்சிறந்தமதி *
யெவ்வண்ணமுற்றதுபாவலரெண்ணுவதெவ்வண்ணமோ *
அவ்வண்ணஞ்செய்தருள்சேயானைக்கோட்டையசலத்திலே. (உஅஎ)

வரைவுமலிவுமுற்றிற்று.

## அறத்தொடுநிற்றல்

கையறுதோழிகண்ணீர்துடைத்தல்.

விண்மணிகண்டலர்பூந்தடக்காவினில்வேறொருவர் *
வண்மணிப்போதினைக்கொய்தனரோவன்னைவைதனளோ *

தண்மணிமேவுநமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பில் *
கண்மணியேகலுழ்வானேன்மனத்திற்கவலையுற்றே. (உ அஅ)

தலைமகள்கலுழ்தற்காரணங்கூறல்.

துகிலங்கவனப்பரிகொண்டதேர்மன்னர்தோன்றியிரு *
நகிலங்கனிந்துமணந்துசென்றாரதைநாடிமகிழ்ந் *
தகிலந்துதிக்குங்குகனானைக்கோட்டையணியொளக்கண் *
முகிலங்குழன்மயிலேகலுழ்காரணமுண்டதுமே. (உ அகூ)

தலைவன்றெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந்தமைகூறல்.

நெறியசயணங்குமுன்னானைவைத்தேனென்றநேயர்சொல்லை *
அறியாமையான்மதித்தேன்சிவநேசர்க்குமந்தணர்க்கும் *
வறியார்க்குமுண்ணவனசத்திரங்கட்டிவைத்தநலம் *
செறியோகமன்னனமசிவாயந்தொழுஞ்சேய்தடத்தே. (உகூ0)

இறைவிதலைவனிகந்தமைசெப்பல்.

பீடவிர்வேலர்திருவானைக்கோட்டைப்பிறங்கலின்மால் *
நீடவர்காதலிற்சொல்வாய்மையைநினையாதுசென்றார் *
ஏடவிழ்தாரன்பர்மாதர்க்குப்பேதையரென்றபெயர் *
ஆடவர்சொன்மெய்யென்றெண்ணுவதால்வந்ததாயிழையே. (உகூக)

பாங்கியியற்பழித்தல்.

வண்மைகொள்வேலர்திருவானைக்கோட்டைநன்மாதிரத்தில் *
திண்மையுமெங்குந்தொழுந்தன்மையுங்கொண்டதெய்வதமுன் *
உண்மையதாயுனைவிட்டகலேனென்றுரைத்தவருன் *
கண்மையுஞ்சோரவைத்தார்வெற்பர்போலன்பர்கண்டிலமே. (உகூஉ)

தலைமகளியற்படமொழிதல்.

மன்னங்கவிக்கருள்சீரானைக்கோட்டையைவாழ்த்தவைக்குச் *
சொன்னங்கொடுத்தருளக்குகன்போலில்லைச்சொல்லதுபோல் *
என்னங்கனதனஞ்சேரன்பர்தன்னையெழின்மயிலே *
பின்னம்படவெண்ணிற்காப்பார்நமக்குப்பிறரில்லையே. (உகூங)

தெய்வம்பொறைகொளச்செல்குவமென்றல்.

குருவடிவானதிருவானைக்கோட்டைக்குமரர்வெற்பில் *
உருவடிவன்பர்குறைசெய்ததில்லெம்முறையிலென்று *
மருவடிப்போதிட்டுவந்தித்தணங்கின்மறந்தணிய *
திருவடிபோற்றமின்னேயிருபேர்களுஞ்செல்குவமே. (உகூச)

இல்வயிற்செறித்தமையியம்பல்.

பண்ணார்ந்தவேலர்திருவானைக்கோட்டைப்பருப்பதத்திட் *
டுண்ணாரிழக்கும்பொருட்பேணுவதொப்பவொள்ளியமைக் *

கண்ணாரனையர்கள்காவல்செய்தாரொனக்காரிகையே *
தண்ணார்மலர்முகமாதர்கள்வாயலர்த்தன்மைகண்டே. (உருரு)

செவிலிகனையிருளவன்வரக்கண்டமைகூறல்.

கதிக்கின்றகொங்கைமின்னேமுன்னொருதினங்காரிருள்வாய் *
மதிக்கின்றவன்னைவரக்கண்டனணந்தமன்னவனைக் *
கொதிக்கின்றதுன்பமிடியிருளோட்டுங்கொடைக்கதிராய் *
உதிக்கின்றவேலர்திருவானைக்கோட்டைநல்லோங்கலிலே. (உருசு)

எறிவளைவேற்றுமைக்கேதுவினவல்.

நலம்பலமேவுநமசிவாயந்தொழுநற்குமரன் *
சிலம்பயலேனற்புனங்காத்தபின்மின்மெய்ச்செவ்விகுன்றிக் *
கலம்பலமேவுந்தனத்திற்பசலேயுங்கட்புனலும் *
புலம்பலுங்கொண்டதிவ்வாறெனத்தேர்கிலன்பொற்கொடிக்கே. (உருஎ)

பாங்கிவெறிவிலக்கல்.

மிடிக்கிடையூறுசெய்வேளானைக்கோட்டைநல்வெற்பிடத்தில் *
துடிக்கிடையொத்தமின்னாள்பொருட்டாய்மதிசூடிமகன் *
கொடிக்கிடையானதைவிட்டவென்றேமனங்கூர்ந்தடியேம் *
குடிக்கிடையானமனையில்வந்தீரயிற்கொண்டவரோ. (உருஅ)

வெறிவிலக்கியவழிசெவிலிபாங்கியைவினதல்.

நல்லானைக்கோட்டைநகரார்க்குந்தொண்டர்க்குநாவலர்க்கும் *
சொல்லானமன்னனமசிவாயத்துக்குஞ்சுற்றத்திற்கும் *
எல்லாநலமுந்தருங்குமரோசரொழிலுருச்சேர் *
வல்லானையேனிந்தவாறுரைத்தாய்மடமான்விழியே. (உருகூ)

பூத்தருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

வியமன்னும்வேலர்திருவானைக்கோட்டைநல்வெற்பிடத்தில் *
மயமன்னுநின்முகக்கோலத்தைக்கண்டுமடவம்வெருவிப் *
பயமன்னுகஞ்சமுநீயுநட்பாகென்றுன்பாவையர்க்கோர் *
புயமன்னர்தந்தனர்யாம்பொழிலாடியபோதினிலே. (ருய)

புனறருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

நிதநலமார்ந்தகுகனானைக்கோட்டைநன்னீர்வளைக்கண் *
மதநலமார்ந்தநின்மங்கையங்கொங்கைதன்வாய்வருபுற் *
புதநலமானதைவெல்பகைமாற்றப்புனல்செயுமப் *
பதநலமாய்வந்தெடுத்தணைத்தானொருபார்த்திபனே. (ருயக)

களிறுதருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

பொருதிடுங்குஞ்சரக்கோட்டுக்குவலக்கைப்போர்கொடுத்து *
மிருதிடுநம்மங்கைகோட்டுக்குமார்பைமிகக்கொடுத்துக் *

கருதிடக்கைகொண்டணைத்தானம்மன்னன்மின்கற்றவர்க்கு *
விருதிடுஞ்செல்வனமசிவாயந்தொழும்வேள்வெற்பிலே. (௩௱உ)

தலைமகள்வேற்றுமைகண்டுநற்றாய்செவிலியைவினாதல்.

மாதாமவேலர்திருவானைக்கோட்டைவளையிடத்தில் *
சூதார்முலையனமேநங்கனிக்குத்துணைமுலையும் *
போதார்முகமும்விழிகளுமெய்யுமுன்போலலவே *
றேதாகிலுமுளதேன்மறையாமலியம்பெனக்கே. (௩௱௩)

செவிலிநற்றாய்க்குமுன்னிலைமொழியாலறத்தொடுநிற்றல்.

கோத்திட்டபூண்முலைமாதெயொருமன்னர்கோபதியைக் *
காத்திட்டவேலர்திருவானைக்கோட்டைநற்காவில்வய *
மாத்திட்டமாய்வந்ததோவெனவந்துநம்மாதர்வல்லி *
பூத்திட்டதோவில்லையோவென்றநாளினிற்புல்லினரே. (௩௱௪)

அறத்தொடுநிற்றன்முற்றிற்று.

## உடன்போக்கு.

பாங்கிதலைவற்குடன்போக்குணர்த்தல்.

அம்மதிகங்கொண்டசேயானைக்கோட்டையணிகொள்வெற்பா *
இம்மதியன்றிப்பிறிதில்லைமூவுலகியந்திடினும் *
சம்மதியார்கண்முலைவிலைக்காயெபர்தாமதனால் *
செம்மதிநேர்முகப்பொன்னுடன்சேருன்றிருநகர்க்கே. (௩௱௫)

தலைவனுடன்போக்குமறுத்தல்.

கலைவிலையாய்க்கொடிருவானைக்கோட்டைக்கடம்பன்வெற்பில் *
முலைவிலைக்கோதிரிலோகமென்பார்நுமர்மொய்பொழில்சேர் *
மலைவிலகாதவெம்மூரோவணித்தன்றுமான்விழிநல் *
நிலைவிலகாவிவளோடார்நடப்பர்நெடுஞ்சுரத்தே. (௩௱௬)

பாங்கிதலைவனையுடன்படுத்தல்.

வெற்பேநிகர்தனங்கார்குழற்பாரமுமேவிவளர் *
கற்பேபொருளெனவெஞ்சுரத்தேசெலுங்காலையிற்சீர் *
நற்பேர்சிறந்தகுகனானைக்கோடடைநன்னகமன்ன *
பொற்பேசிறந்தநின்னன்பேநிழலென்றன்பூங்கொடிக்கே. (௩௱௭)

தலைவன்போக்குடன்படுதல்.

நெருப்பானதிலுங்கொடிகாஞ்சுரஞ்செலநேரொன்மனம் *
இருப்பானதிலுங்கடுமைமின்னேநிதியீய்ந்திடைக்கு *
விருப்பானசெல்வனமசிவாயந்தொழும்வேள்வனாவாய் *
உருப்பாதம்பஞ்சலருன்றப்பொருதுநல்லொண்டொடிக்கே. (௩௱௮)

பாங்கிதலைவிக்குடன்போக்குணர்த்தல்.

போதின் மிதிக்கச்சகியாப்பதங்கற்பொருந்துசுரம் *
மீதின் மிதிக்கச்சகிப்பதெவ்வாறெனவெப்பமுற்றூர் *
ஆதிக்குமரர் திருவானைக்கோட்டையணிவளைக்கார் *
ஓதிக்குணமயிலேதெரியாதன்பருள்ளுறவே. (நாகூ)

தலைவி நாணழிவிரங்கல்.

பண்சென்மமாகிவளரானைக்கோட்டைப்பதிமுருகர் *
தண்சென்மப்பூம்பதம்போற்றூர்நலந்தவிர்தன்மையைப்போல் *
எண்சென்மமானவுயிர்வாழநாணமிழப்பதனால் *
பெண்சென்மம்போலப்பெரும்பாவச்சென்மம்பிறிதில்லையே. (நாய)

கற்பின்மேம்பாடுபாங்கிகழறல்.

வாணோர்விழிமடவார்களுக்கிந்தநல்வையகத்தில் *
நாணேபெரிதெனச்சொல்வதையாய்ந்திடினற்றளப் *
பூணோர்பெறும்புயவேளானைக்கோட்டைப்பொருப்பிடத்தில் *
வீணேயதுமயிலேகற்பைப்பார்க்கிலுமேன்மையன்றே. (நகக)

தலைவியொருப்பட்டெழுதல்.

சொல்லும்பலபெண்கள்வாய்வசையன்னையர்சோதனையும் *
புல்லுஞ்சிலபொழுதிற்சிலபேரன்றுபொய்மிடியை *
வெல்லுங்கனகநமசிவாயந்தொழும்வேள்வரைக்கண் *
வல்லும்பொருமுலையார்பலரொய்திவருந்துகவே. (நகஉ)

பாங்கிசுரத்தியல்புரைத்துழித்தலைமகள்சொல்லல்.

கடத்திற்சிறந்தமுலையாயிதென்சொற்கழறுகின்றாய் *
திடத்திற்சிறந்தநமசிவாயந்தொழுஞ்சேய்வரைக்கண் *
விடத்திற்கொடியமனத்தார்நம்மன்னையர்மேவிவளர் *
இடத்திற்கொடியதுவோவன்பரோடுசெல்லேர்சுரமே. (நகங)

பாங்கிகையடைகொடுத்தல்.

திருமந்தரமொத்தசீரானைக்கோட்டைச்செவ்வேள்கவித்தார் *
மருமந்தரித்துக்கவிஞராக்காத்தருள்வண்மையைப்போல் *
கருமம்பிரிதின்றிவளைநீகாக்கக்கடவதன்பா *
தருமந்தவிர்கின்மின்னாட்கொருதாங்கறிப்பில்லையே (நகச)

பாங்கிவைகிருள்விடுத்தல்.

இசைகூர்ந்தவேலர்திருவானைக்கோட்டைநல்லேந்தலின்கண் *
நசைகூர்ந்தமாதரசேநீங்கணடிநடக்கும்வழி *
மிசைகூர்ந்துயான்வருவேனுமர்க்கேற்பவிடைகொடுத்து *
வசைகூர்ந்தமங்கையர்வாயோடன்னார்முகமாறவைத்தே (நகரு)

தலைமகளைத்தலைமகன்சுரத்துய்த்தல்

மலியாணர்காவிற்றடம்புரிவண்டிசைவாய்ந்தனங்கள் *
கலியாணஞ்செய்நந்நகர்க்குமின்னேகல்விகண்டுநல்கச் *
சலியாதமன்னனமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பில் *
நலியாமற்பாதமெய்நோவாமன்மெல்லநடந்தருளே. (ருகசு)

தலைமகன்றலைமகளசைவறிந்திருத்தல்

வாடாமலர்த்தடஞ்சேராணைக்கோட்டையில்வாழ்குகனைப் *
பாடாரைவாட்டுங்கலிவெம்மைபோன்றிடும்பாலைதன்னில் *
ஏடாமுன்பாதம்பரல்வெப்பந்தாங்கவியைந்ததன்று *
சூடாறுமெல்லைமின்னேதங்குவோமிந்தச்சோலையிலே. (ருகஎ)

உவந்தலர்சூட்டியுண்மகிழ்ந்துரைத்தல்.

வேதம்பலகல்விசேராணைக்கோட்டையின்மேவியருள் *
நீதம்பொருந்துவடிவேலர்காவளர்நீர்வளைக்கண் *
சீதம்பெறுமலர்கூந்தலிற்சூட்டவுஞ்சேயிழைதன் *
பாதந்தடவவும்வாய்த்ததுநான்செய்தவப்பயனே. (ருகஅ)

கண்டோரயிர்த்தல்

கோட்டைக்கரத்தைமுலைவிழியால்வெல்லுங்கோமகளும் *
கோட்டைக்கரத்தில்வைத்தானெக்கொற்றவனுங்குளிர்பொற் *
கோட்டைத்தருவளர்விண்ணவரோநிதிகூர்குஞ்சரக் *
கோட்டைத்தலத்தவரோதெரியோங்குகன்கோத்திரத்தே. (ருககூ)

கண்டோர்காதலின்விலக்கல்

நிதநன்மைநல்குங்குகனைக்கோட்டைநன்னீர்வளைக்கண் *
மதனும்ரதியுமெனவருவீரிந்தவன்சுரத்தில் *
விதனம்பெறவினஞ்செல்லவொண்ணாதுவெய்யோனடந்தான் *
பதனமுதுந்தசையுமுண்டுதங்குமெம்பாடியிலே. (ருஉய)

கண்டோர்தன்பதியணிமைசாற்றல்

கற்புறுமங்கையுநீயுமதோவெதிர்காணுகின்ற *
வெற்புக்கடந்திடின்மின்னுருலாவியமேடைகளும் *
பொற்புறுகாவுங்கொடிமணிக்கோபுரமும்பொருந்தும் *
அம்புதவேலர்திருவாணைக்கோட்டையணிநகரே. (ருஉக)

தலைவன்றன்பதியடைந்தமைசாற்றல்

காந்ததெழின்மின்னிடைக்காரிகையேமிகக்கால்வருந்தச் *
சுரந்தனிற்சென்றனமென்றயரேல்சுகிர்தந்துலங்கப் *
புரந்திடுசெல்வனமசிவாயத்துக்கும்புந்தியர்க்கும் *
வரந்தரும்வேலர்திருவாணைக்கோட்டைக்குவந்தனமே. (ருஉஉ)

உடன்போக்குமுற்றிற்று.

செவிலிபாங்கியைவினாதல்.

தொகைகொண்டதோழியருநீயுநானுமென்சொல்லையும் *
நகைகொண்டவாவியுஞ்சோலையுஞ்சிற்றில்லுநன்மணிபல் *
வகைகொண்டவாறுமுகனைக்கோட்டைநன்மாதிரத்தில் *
மிகைகொண்டரற்றமின்னெங்குசென்றாடனிமெல்லியலே. (௩௨௩)

பாங்கிசெவிலிக்குணர்த்தல்.

திடந்தாங்கும்வேலர்திருவானைக்கோட்டைச்சிலம்பிடத்தில் *
வடந்தாழ்முலைப்பருவங்கண்டுமாலைமணம்புரியப் *
படர்ந்தாரிலைநமரானதினலொருபார்த்திபன்பின் *
நடந்தாள்வெம்பாலையினீரோனநீபெற்றநங்கையன்னே. (௩௨௪)

செவிலிதேற்றுவோர்க்கெதிரழிந்துமொழிதல்

மாலூட்டருந்துயர்மாற்றுகின்றீர்மடிவைத்தணைத்துப் *
பாலூட்டிக்கண்ணுக்குமைதீட்டிமுப்பழம்பாலனமுக் *
காலூட்டிக்காத்ததற்கோவெனைநீங்குமின்சுற்றவர்க்காய் *
போலூட்டும்வேலர்திருவானைக்கோட்டைப்பொருப்பிடத்தே (௩௨௫)

செவிலிதன்னறிவின்மைதன்னைநொந்துரைத்தல்.

எந்நாளும்பேதையபொன்போற்புவியிலிலைச்சுரத்தோர் *
தென்னாளுமன்னவன்பின்னகநாளைக்குச்செல்வனெனச் *
சொன்னாள்குறிப்புணாயாலதையோர்ந்திலன்சொற்றமிழ்க்கு *
பொன்னாளுநல்குங்குகனைக்கோட்டைநற்பூதரத்தே. (௩௨௬)

செவிலிதெய்வம்வாழ்த்தல்.

பரவியதொண்டர்க்குஞ்சீரானைக்கோட்டைப்பதியவர்க்கும் *
விரவியதுன்பந்தவிர்த்தருள்வேலவர்வெற்பணங்கே *
உரவுகொணெஞ்சத்தொடுசென்றமாதென்னுடன்மகிழ *
வரவருள்செய்மிகவாழ்த்துகின்றேனுன்மலரடிக்கே. (௩௨௭)

செவிலிநற்றாய்க்கறத்தொடுநிற்றல்

அறமிகச்செய்தும்பெறும்பிள்ளைபெண்பிள்ளையாகிலது *
பிறமனைசேரும்பெற்றார்க்கென்னபேறென்றபேச்சமல்க *
விறன்மிகுசெல்வனமசிவாயங்கொழும்வேள்வெற்பிலோர் *
திறன்மன்னன்பின்னடந்தாளன்னைநீபெற்றசேயிழையே, (௩௨௮)

நற்றாய்பாங்கிதன்னொடுபுலம்பல்.

நன்றேகவிக்கருள்வேளானைக்கோட்டைநன்னகமதில் *
அன்றேயிதனையுரைத்தனையேன்மணமாயிழைக்குக் *
குன்றாதுசெய்துவைப்பேன்விடுத்தாயழற்கூர்சுரத்தில் *
என்றாளென்பொன்னையெய்திமகிழ்வேனுளத்தேந்திழையே. (௩௨௯)

செவிலிசுரவொடுபுலம்பல்.

அரமெனக்கல்லுறும்பச்சுரத்தோர்மன்னனுசைபற்றிச் *
சரமெனவொல்லையென்காதலிசென்றதைத்தாஅறிந்தும் *
பரமெனும்வேலர்திருவாணைக்கோட்டைப்பருப்பதத்தில் *
மரமெனுநீர்மையன்றேதடுத்தாயில்லைவன்சுரவே. (௩௪௪)

சுவடுகண்டிரங்கல்.

முன்னடியிந்நெறிச்சென்றோரடியெழின்மொய்த்திலங்கும் *
பின்னடிமன்னன்பதத்தடிதொண்டரைப்பேணிநிதி *
தன்னடிநல்குந்திருவாணைக்கோட்டைத்தலமுருகர் *
பொன்னடிபோற்றுமென்மின்னடியிவ்வண்ணப்பூவடியே. (௩௪௫)

செவிலிகலந்துடன்வருவோர்க்கண்டுகேட்டல்.

வதனத்திலாறுகொள்வேளாணைக்கோட்டைவளையிடத்தில் *
விதனத்தோடென்னையுமிவ்வாறலைத்தபொன்மேவுநல்லச் *
சுதனைத்திடவருநும்மெதிர்தோன்றினரோதுணிந்தோர் *
மதனைத்தவேந்தன்ரதியொத்தமாதொடிவ்வன்சுரத்தே. (௩௪௬)

அவர்புலம்பறேற்றல்.

காராணைக்கன்றருள்செய்தானைப்போலநான்கண்டமன்னும் *
வாராணைக்கோட்டுமுலைமேவென்பொன்கண்டவாகுமின்னும் *
சூராணைக்கன்றையுமான்கன்றையுங்கொண்டுதோன்றுசெவ்வேள் *
சீராணைக்கோட்டையிற்சேர்வாரிந்நேரத்திற்சேயிழையே (௩௪௭)

செவிலிபுதல்வியைக்காணாதுகவலைகூர்தல்.

காவினடக்கினுங்காநேகுமென்றுகலுழ்ந்துமலர்ப் *
பூவினடக்கிப்புரந்தவென்செல்வியைப்பொன்னுடன்சீர் *
மேவியவேலர்திருவாணைக்கோட்டைநல்வெற்பிடத்தில் *
பாவியென்கண்குளிரக்காணப்பெற்றிடும்யான்மையென்றே. (௩௪௮)

கற்பொடுபுணர்ந்தகவ்வைமுற்றிற்று.

## மீட்சி.

தலைவிசேணகன்றமைசெவிலிதாய்க்குணர்த்தல்.

சீரார்ந்தமன்னனமசிவாயந்தொழுஞ்சேய்வனாயாய் *
பாரார்ந்ததானத்திற்பாராததில்லைநம்பைங்கிளியைத் *
தேரார்ந்தவீதிபூமணிமாளிகைசெய்வளத்தோ *
டோரார்ந்ததன்னகர்கொண்டுசென்றானொருவேந்தலின்றே (௩௪௯)

தலைவன்றம்மூர்சார்ந்தமைசாற்றல்.

அதுநானுனைக்கண்டவெற்பிடநீகுடைந்தாடுசுனை *
யிதுநாண்மலர்ப்பொழில்பின்னதுவாசவனெண்கணன்மா *

விதுநாளும்போற்றுந்திருவானைக்கோட்டைநல்வேலர்வெற்பில் *
மதுநாண்மலர்க்குழலாய்வருவாய்நந்தம்வாழ்நகர்க்கே. (ருய)

தலைவிமுன்செல்வோர்தம்மொடுதான்வரல்பாங்கியர்க்குணர்த்திவிடுத்தல்

குறையுறுமேதிலர்தாயர்சொல்வார்த்தைக்கொடுமையினல் *
இறையுடன்போய்மிகவின்பத்தொடுவருமென்னியல்பை *
நிறையுறும்வேலர்திருவானைக்கோட்டைநன்னீர்வளைவாய்த் *
துறையுறச்செல்பவரோசொல்லுவீரொன்றன்றோழியர்க்கே. (ருக)

முன்சென்றோர்பாங்கியர்க்குணர்த்தல்.

கந்தரமார்பொழிற்சீரானைக்கோட்டைக்கனநகர்வாழ் *
கந்தரம்பாதந்தொழவருவாரெனக்கானதையி *
கந்தரம்பைத்தொடைமாதொருதோன்றல்பின்கம்பினைநேர் *
கந்தரந்தந்திடைக்கன்னியரோவரக்கண்டனமே (ருஉ)

பாங்கியர்கேட்டுநற்றாய்க்குணர்த்தல்.

அரசுடன்சென்றநம்பொன்னம்மனைக்கின்றடையுமென்று *
சரசநல்லோருரைத்தாரகையாய்ந்திடிற்றூர்கொள்சுப *
முரசென்றுமார்க்குந்திருவானைக்கோட்டைமுருகர்பதம் *
பரசினதானந்தங்கைமேற்கிடைத்ததுபாக்கியமே (ருங)

நற்றாய்கேட்டவனுளங்கோள்வேலனைவினுதல்.

தம்மனைபோலருள்சீரானைக்கோட்டைநற்சாமிவெற்பில் *
பம்மனைநேர்முகப்பொன்னுடனேவரும்பார்த்திவன்முன் *
எம்மனைக்கோமகிழ்ந்தெய்துவதன்றித்தன்னின்றிடுந்தாய் *
அம்மனைக்கோசொல்லும்வேளுருமேனியிலார்ந்தவரோ. (ருச)

மீட்சிமுற்றிற்று.

## தன்மனைவரைதல்.

நற்றாய்மணனயர்வேட்கையிற்செவிலியைவினுதல்.

சித்திசெய்மூத்தநயினார்க்கிளையநற்சீர்முருகர் *
சத்திகொள்பாதம்பணிந்தானைக்கோட்டைச்சயிலமின்னே *
இத்தினம்வெற்பரனைபாலியம்புவமோநமது *
புத்திரிவாழ்கம்மில்லிற்பொன்மாலைபுனையவென்றே. (ருரு)

செல்விக்கிகுளைவரைந்தமையுணர்த்தல்.

தேடியவன்னைக்கென்சொல்வதன்னேநம்பொன்செல்வியர்க்கோர் *
நீடியசெல்வக்குகனானைக்கோட்டைநன்னீர்வளைக்கண் *
கோடிதன்சுற்றங்கண்மேவப்பொன்மாலையக்கொற்றமன்னர் *
சூடினரொன்றுசொன்னாரின்றென்முன்சிலதூதர்களே. (ருசு)

வரைந்தமைசெவிலிநற்றாய்க்குணர்த்தல்.

சங்கேய்தடங்கொடிருவானைக்கோட்டைநற்சாமிவெற்பில் *
பங்கேருகவிழியாய்மிகவேனைப்பரிசனத்தோ *
டங்கேமணமெய்திமன்னவனோடுநம்மாயிழையின் *
றிங்கேநம்மில்லில்வருமென்று தூதரியம்பினரோ. (ருருஎ)

தலைவன்பாங்கிக்கியான்வரைந்தமைநுமர்க்கியம்புசென்றென்றல்.

மாடமுங்காவுமதில்பொற்சிகரமும்வன்னமிட்ட *
கூடமுஞ்சேர்ந்ததிருவானைக்கோட்டைக்குமரர்வெற்பில் *
பீடமுற்றும்பொன்னையான்மணந்தேனதைப்பெட்புறத்தேன் *
பாடப்புயற்குழலாய்புகல்வாய்நுமர்பாங்கிலுற்றே. (ருருஅ)

பாங்கிதானதுமுன்னேசாற்றியதுரைத்தல்.

நன்மாலைகொண்டகுகனானைக்கோட்டைநகரின்மெச்ச *
மின்மாலைசேரெங்கள்செல்விக்குநீநுமர்மேவிடமும் *
பொன்மாலைசூட்டிமணஞ்செய்தசீர்த்தியைப்பொற்பமுன்றேன் *
பன்மாலைசேர்குழலன்னைதன்பாலிற்பகர்ந்தனனே. (ருருகூ)

தன்மனைவரைதன்முற்றிற்று.

## உடன்போக்கிடையீடு.

நீங்குங்கிழத்திபாங்கியர்தமக்குத்தன்செலவுணர்த்திவிடுத்தல்.

மல்வீரவேலர்திருவானைகோட்டைவரையிடத்தில் *
பல்வீரக்கானுங்கடந்துநுஞ்சேயிழைபண்புடனோர் *
வில்வீரன்பின்சென்றனள்மகிழ்வாகவியப்பவெனச் *
சொல்வீர்கலந்துவழிசெல்லுவீரொன்றுணைவியர்க்கே. (ருகூ0)

தலைமகடன்செலவீன்றாட்குணர்த்திவிடுத்தல்

சரதத்திற்றன்மனமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பில் *
விரதத்தில்வல்லநெடுஞ்சடையீர்மிகவில்லுமிழ்பொன் *
இரதத்தின்மன்னருடனேகுமென்றனியல்பனைத்தும் *
வரதத்தில்வல்லநும்வாய்மலர்வீர்மனைவாழனைக்கே. (ருகூக)

நற்றாய்க்கந்தணர்மொழிதல்.

வலங்கலமன்னுங்குகனானைக்கோட்டைநன்மாதிரத்தில் *
கலங்கலுற்றஞ்சுமனத்தையலேயுன்னற்காதலியோர் *
இலங்கிலைவேலன்பின்சென்றாள்கவிஞர்க்கிகல்புரிவோர் *
மலங்கொள்ளுமெய்ப்பற்றுந்தீப்போற்கனல்கின்றவன்சுரத்தே. (ருகூஉ)

நற்றாயறத்தொடுநிற்றவிற்றமர்பின்சேறலைத்தலைவிகண்டுதலைவற்குணர்த்தல்.

கவனத்திற்செல்லத்தடையாகவீரங்கொள்காவலனே *
புவனத்துமெச்சுங்குகனானைக்கோட்டைப்பொருப்பிடத்தில் *

பவனத்தைநேர்கொண்டமானுங்கொடியும்பலவுமுற்று *
நவநத்துலாவியதேரோங்கல்சேனைநதியுற்றதே. (ரு௩௩)

தலைமகளைத்தலைமகன்விடுத்தல்.

நல்லேர்திகழுங்குகனைகோட்டைநன்னகமதில் *
வில்லேந்துசெங்கையயில்வேடரோலென்கைவெல்லுமம்பால் *
கொல்லேன்வருத்தந்தணிவாயவருன்குலத்தவரேல் *
செல்லேய்க்கும்பூங்குழலாய்நீமகிழ்ந்தெதிர்செல்லுகவே. (ரு௩௪)

தமருடன்செல்பவளவன்புறநோக்கிக்கவன்றரற்றல்.

உன்னிடுந்தொண்டர்க்கருண்மிகநித்தமுவப்பநல்கும் *
துன்னிடுஞ்செல்வத்திருவானைக்கோட்டைச்சுவாமிவெற்பில் *
என்னிடர்தீரவென்சுற்றமும்வாழநல்லேர்மன்னனை *
வென்னிடச்செய்தபரிநெடுநாணலமேவுகவே. (ரு௩௫)

உடன்போக்கிடையீடுமுற்றிற்று.

## வரைதல்.

சென்றோன்மீண்டுவந்தந்தணரையுஞ்சான்றோரையுமுன்னிட்டு
வரைந்துகொண்டுழிக்கண்டோர்மகிழ்ந்துகூறல்.

மாந்தரெல்லாந்துதிசேயானைக்கோட்டையின்மாமணநம் *
வேந்தனைப்போலெவர்தான்புரிந்தாரிந்தமேதினியில் *
பாந்தளுமாலும்பகமுந்தியாயதிற்பள்ளிகொள்ளப் *
போந்திடுமோவிவன்மின்னார்செந்தாமரைப்பூந்திருவே. (ரு௩௬)

வரைதன்முற்றிற்று.

## இல்வாழ்க்கை.

தலைவன்றலைவிமுன்பாங்கியைப்புகழ்தல்.

பாவாய்நின்மேனிபசந்திடுவாறுநின்பாங்கியும *
வாவாயென்மீதுற்றவன்பினன்றோவிந்தமண்டலத்தில் *
கோவாய்த்திகழுநமசிவாயம்பணிகொண்டருள்செய் *
பூவாய்த்தகூந்தலுமையருள்வேலவர்பூகரத்தே. (ரு௩௭)

தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.

அத்தந்திருவுறைசிரானைக்கோட்டையணிமுருகர் *
முத்தநகைவள்ளிதெய்வானைபோனலமுற்றுவெற்பா *
சித்தங்களிக்குநமசிவாயந்தன்செயகிளைபோல் *
நித்தமுநீயிந்தப்பொன்னெடும்மொழியநீணிலத்தே. (ரு௩௮)

பாங்கிதலைவியைவரையுநாளளவும்வருந்தாதிருந்தமையுணாயாயென்றல்.

நற்பாலைநேர்மொழியாய்மணஞ்செய்புமிந்நாள்வரையும் *
கற்பானநீயெவ்விதமிருந்தாயலர்கன்னியர்கள் *

சொற்பாண மூங்கொங்கையின்பாரமுங்கொண்டுதொல்லுலகில் *
பொற்பானகந்தர்திருவானைக்கோட்டைப்பொருப்பிடத்தே. (௩௬௯)

பெருமகளுணர்த்தல்.

துங்கமிகுந்ததிருவானைக்கோட்டைச்சுவாமிவெற்பில் *
புங்கமொப்பாம்விழிக்காரிகையேயன்புபூண்டுமுன்னம் *
பங்கமில்லாமன்னர்நல்கியபூவுற்றபைந்தழையே *
வங்கமதாகமயலாழிநீந்தவும்வாய்த்ததுவே. (௩௭0)

தலைவனைப்பாங்கிவரையுநாளளவுநிலைபெறவாற்றியநிலைமைவினுதல்.

அகமகிழ்வாகவரையுமிந்நாள்வரையாண்டகைவாண் *
முகமுகைக்கொங்கைபிரிந்ததெவ்வாறுநன்முத்தமிழ்சேர் *
சகமுகமன்சொல்லிவாழ்த்தானைக்கோட்டைநற்சாமிவெற்பில் *
பிகமுமுந்நீருமுழக்கொலிகாதிற்பெறுதலும்றே. (௩௭௧)

மன்றன்மனைவருசெவிலிக்கிகுளையன்புறவுணர்த்தல்.

தேசம்புகழுங்குகனானைக்கோட்டைச்சிகரமதில் *
கேசங்கண்கன்னந்தனமேனியன்பிடைகேழ்சிலம்பு *
வாசங்கலந்தகுழலாய்நம்மாதிவைமங்கலமாய்ப் *
பாசங்கலந்துநல்கக்கொண்கராங்கயம்பற்றுறுமே. (௨௭௨)

பாங்கியில்வாழ்க்கைநன்றென்றுசெவிலிக்குரைத்தல்,

மாதங்கக்கோட்டையில்வாழ்வார்நல்வேலனைவாழ்த்தியன்னை *
மாதங்களில்வருநாடோறுஞ்செய்தன்மவாழ்வெனநம் *
மாதங்கவேதம்பயில்வோர்முதலெவ்வருணருக்கும் *
மாதங்கமன்னமுமீய்ந்தோர்வளர்மனைவாழ்க்கைநன்றே. (௩௭௩)

மணமனைச்சென்றுவந்தசெவிலிபொற்றொடிகற்பியனற்றாய்க்குணர்த்தல்.

கனமானைக்கோட்டைக்குமரனைப்பாடுங்கவிஞரைப்போல் *
இனமானநன்மையெல்லாநமக்கேயன்னையெய்தினசீர் *
தனமானைக்கோட்டையொடபானநம்பெண்கற்பின்றன்மைகண்டு *
மனமானதொல்கியருந்ததியும்விண்ணினில்வைகினளே. (௩௭௪)

நன்மனைவாழ்க்கைத்தன்மையுணர்த்தல்.

அரன்றேழன்சேமச்சசிகேழ்வன்வாழும்ணிநகர்போல் *
உரன்றேன்றவாழ்க்கையுண்டானதன்னேயுமையுற்றுவளர் *
பரன்றேன்றலானகுகனானைக்கோட்டைப்பருப்பதத்தில் *
வரன்றோளணைந்துமகிழ்வாய்நம்பொன்மகள்வாழ்மனையே. (௩௭௫)

செவிலிநற்றாய்க்கிருவர்காதலையுமறிவித்தல்.

இகலானைவென்றுதுயர்நீக்கித்தொண்டர்க்கிருமையிலும *
மிகலானசெல்வந்தருமானைக்கோட்டைநல்வேலன்வெற்பர் *

அகலாரொருநொடிப்போதுநம்பொன்னைவிட்டஞ்சுமொழி *
புகலாரவளவர்க்கென்மடங்காமன்பிறபூங்கொடியே. (ஙஎசு)

இல்வாழ்க்கைமுற்றிற்று.

## பரத்தையிற்பிரிவு.

காதலன்பிரிவுழிக்கண்டோர்புலவிக்கேதுவிதாமவ்விறைவிக்கென்றல்.

பாடல்கொள்கந்தர்திருவானைக்கோட்டைப்பருப்பதமின் *
ஊடலுக்கேதிதென்றேபோதுமாதர்களுரிகண்டு *
தோடலர்கூந்தற்கயல்விழிபாதத்தொனிச்சிலம்போ *
டாடல்செய்மஞ்ஞையைப்போல்வளைந்தாரரசன்றனையே. (ஙஎஎ)

தனித்துழியிறைவிதுனித்தழுதிரங்கல்.

கனிவாய்த்தெய்வானைவரனானைக்கோட்டைக்கடம்பன்வெற்பில் *
நனிவாய்த்தமைக்கட்புனல்சோரநெஞ்சநலிந்தலர்போல் *
பனிவாய்த்தமெய்யும்பசப்பூரநான்கொண்டபாசறைபோல் *
தனிவாய்த்திருந்துபுலம்பலுற்றேங்குவர்தார்மன்னரே. (ஙஎஅ)

ஈங்கிதுவென்னெனப்பாங்கிவினுதல்.

நிரந்தரம்பொன்புலவர்க்கீய்ந்துசீர்த்திநிலைநிறுத்திக் *
திரஞ்செய்யுஞ்செல்வனமசிவாயங்கொழுஞ்சேய்தடத்தில் *
வரந்தயைகொண்டநம்மன்னருன்பான்மறவாதிருக்கக் *
கரந்தனர்போலக்கலங்குவதேன்புகல்கன்னிகையே. (ஙஎசு)

இறைமகன்புறத்தொழுக்கிறைமகளுணர்த்தல்.

சொல்லியல்சேர்ந்ததிருவானைக்கோட்டைச்சுவாமிவெற்பில் *
அல்லியந்தாமரைத்தேனுண்டுமுல்லையலர்தனிலும் *
நல்லியங்காட்டிக்கள்ளுண்சுரும்பார்பொழினாட்டுமன்னர் *
வல்லியைநேரயலார்மனைசார்ந்தனர்வாள்விழியே. (ஙஅ0)

தலைவிபைப்பாங்கிகழறல்.

உரித்தொடுநெங்கற்பியலையுமில்லறமுமுவந்து *
தரித்தென்றுங்காக்கத்தகுமன்றிச்சீர்த்தியைக்காரணியில் *
விரித்திடுமன்னனமசிவாயந்தொழும்வேலர்வெற்பர் *
சரித்திரமின்னதிதுவென்றுபேசத்தகாதுமின்னே. (ஙஅக)

தலைவிசெவ்வணியணிந்துசேடியைவிடுப்புழி
யவ்வணியுழையர்கண்டழுங்கிக்கூறல்.

கொங்காமுலைவள்ளிசேரானைக்கோட்டைக்குமரர்வெற்பில் *
திங்காயுருப்பலமாக்கவொடாநிறைசேரரனுள் *
பாங்காய்நன்மாதந்தொறும்பூக்குங்கன்னியிற்பற்றுகனி *
மாங்காய்மடியிடுவார்வாயில்வந்திடுவாறிதென்னே. (ஙஅஉ)

விருந்துகண்டொழித்தவூடல்வெளிப்படநோக்கிச்
சீறேலென்றவள்சீறடிதொழுதல்

கராவென்றமான்மருமானானைக்கோட்டைக்கடம்பன்வெற்பில் *
ஆராவிடம்போற்சினத்தானைநற்றேர்சிலையம்புடனீ *
நிராயுதனோடுபொரநீதியோநிற்பனோவெதிர்நான் *
தராதரம்பார்த்தெனைக்காப்பாய்நின்கோபந்தணிந்துமின்னே. (௩௯௭)

இஃதெங்கையர்காணினன்றன்றென்றல்

கஞ்சம்பொலிதடஞ்சேரானைக்கோட்டைநற்கந்தர்வெற்பில் *
நெஞ்சந்தியங்கியென்பாதத்திற்போற்றிடுநீர்மைதனை *
நஞ்சங்கலந்தகண்ணணங்கையர்காணினகைப்பதன்றிக் *
கொஞ்சமுந்தான்மதியார்மதிமேவியகொற்றவனே (௩௯௮)

அங்கவர்யாரையுமறியேனென்றல்.

ஏற்றங்கொள்வேலர்திருவானைக்கோட்டைநல்லேந்தன்மின்னே *
போற்றியுமூடற்றவிர்கின்றிலையென்புகலுவன்யான் *
நீற்றைக்களபத்தைப்பூசியமேனியினீர்மையில்லாச் *
சேற்றைத்தரிப்பர்களோவறிவோங்கியசீரியரோ (௩௯௯)

காமக்கிழத்தியைக்கண்டமைபகர்தல்

தானேதெருவில்விளையாடுமைந்தற்றழுவுமின்னே *
மானேயிவனுன்மகனீயிவனன்னைவாவிங்ஙனிற் *
பானேனம்மில்லுக்கெனநீசொலவவள்பார்வையிற்கண் *
டேனேயிவளெங்கையென்றானைக்கோட்டைவேளேந்தலிலே. (௪௱)

தலைவியைப்பாங்கிதணித்தல்.

ஆதவஞ்சேரயில்வேளானைக்கோட்டையசலத்தினின் *
பாதவம்பூவைமுடிவைத்துமன்பனைப்பார்க்கிலைநீ *
மாதவன்பூவைத்தழுவவுந்தானுமணந்ததன்றி *
வாதவன்கூடப்புரிந்ததுண்டோதிருமாதுமின்னே. (௪௱௧)

தலைமகள்புலவிதணியாளாகத்தலைமகனூடல்.

தாவென்றபோதருடந்தானைக்கோட்டைநற்சாமியன்பர் *
நோவென்றுகாக்குந்தயைபோலெண்ணேலென்றனோன்மைநெஞ்சே *
வாவென்றுசொல்லவுடனேநம்பால்வந்திவ்வன்சுரத்தில் *
போவென்றுசொல்லமுன்போனமின்னல்லவிப்பூங்கொடியே. (௪௱௨)

பாங்கியன்பிலைகொடியையெனத்தலைவனையிகழ்தல்.

துங்கங்கொண்மன்னவனேயானைக்கோட்டைச்சுவாமிவெற்பில் *
தங்கத்திலும்விழைவாய்முன்னிவளைத்தழுவியின்று *
பங்கம்படவிகழ்கின்றாய்புதல்வற்பயந்ததற்பின் *
அங்கத்திலென்குறையுற்றதுவோவிந்தவாயிழைக்கே. (௪௱௩)

ஆயிழைமைந்தனுமாற்றுமையும் வாயில்களாகவரவெதிர்கோடல்.

வேதாகமம்புகழ்சீரானைக்கோட்டைநல்வேலர்வெற்பா *
தூதாகமைந்தருநன்மடவார்க்குச்சுபந்தருவர் *
கோதாகவாழும்பரத்தையர்தங்கள்குயந்தழுவ *
மாதாகமாகடந்திடுமாந்தர்வழிமறித்தே. (சாச)

மணந்தவன்போயபின்வந்தபாங்கியோடிணங்கியமைந்தனையினிதிற்புகழ்தல்.

குன்றின்சிறைகொய்தகோபதிபோன்மைந்தன்கொற்றவனைச் *
சென்றிடுந்தேருடனேதகைந்திம்மையிற்செல்வமெல்லாம் *
ஒன்றநமக்களித்தான்மக்கட்பேற்றினையொப்பவெவை *
நன்றதிகந்தருஞ்சேயானைக்கோட்டைநன்னுகமின்னே. (சாரு)

தலைவிதலைவனைப்புகழ்தல்.

பெற்றவர்சுற்றமுறவோரிவரிலும்பெண்கடமக் *
குற்றவர்காதலரொன்றேதுசொல்லின்றுணர்ந்தனன்யான் *
உற்றவஞ்சேர்ந்தநமசிவாயந்தொழநட்புறும்வேள் *
பொற்றடமன்னர்சிநேகமிந்நாளும்பொருந்தல்கண்டே. (சாசு)

பாங்கிமனைவியைப்புகழ்தல்

தேக்கியசெல்வனமசிவாயம்பணிசேய்தன்வெற்பர் *
ஆக்கியகுற்றமெல்லாம்பொறுத்தேத்துமின்னன்பதனை *
நோக்கிடின்மன்னர்முன்செய்தவமோவெங்கணோன்பில்வந்த *
பாக்கியமோவிந்தப்பொன்னுருவாகப்பலித்ததுவே. (சாஎ)

பரத்தையிற்பிரிவுமுற்றிற்று.

## ஓ த ற் பி ரி வு.

கல்விக்குப்பிரிவுதலைமகனுலுணர்ந்ததோழிதலைமகட்குணர்த்தல்.

வாள்விழிவள்ளியொடுமானைக்கோட்டையில்வாழ்பவன்றன் *
தாள்விரும்பித்தொழுவோர்க்கருள்வேலவன்சாரலின்வாய்க் *
கேள்வியில்வல்லநுங்கேழ்வர்கற்றோர்கள்கிளரவைக்கிந் *
நாள்விழைவர்கடந்திடநேர்ந்தனர்நன்மயிலே. (சாஅ)

தலைமகள்கார்ப்பருவங்கண்டுபுலம்பல்.

விழிபுற்றுநீரறியாவிடினுங்கல்விவேண்டிவெற்பின் *
வழியுறுமென்னன்பர்காண்கிலராதன்னைவாழ்த்திநற்பா *
மொழியுங்கவிஞர்க்குச்சீரானைக்கோட்டைமுருகர்தினம் *
பொழியும்பொன்மாரியைப்போற்பொழிகார்தனைப்பூங்கொடியே. (சாகூ)

தலைமகளைப்பாங்கியாற்றுவித்தல்.

அனைத்தையுங்காக்குங்குகனானைக்கோட்டையசல்த்திலுன் *
தனைத்தவிர்ந்தோதற்கன்றிடுமென்னர்நின்றன்சுகத்தை *

நினைத்திங்குசேர்ந்திட மின்னுடனேயிந்நீன்முகில்கள் *
கனைத்துற்றகாரணமென்றறிவாயெழிற்காரிகையே. (சாய)

ஓதற்பிரிவுமுற்றிற்று.

## காவற்பிரிவு.

தோழிதலைவன்காவற்பிரிவுணர்த்தல்.

உம்பரைக்காத்தபின்சீரானைக்கோட்டைக்குவந்தவைக்கும் *
நம்பன்பருக்குநமசிவாயத்துக்குநல்லருள்செய் *
யும்படிவந்தமுருகேசர்காவளரோங்கலின்கண் *
அம்புவிகாக்கநின்கொண்கர்சென்றுறொழிலாரணங்கே. (சகக)

தலைமகள்கூதிர்ப்பருவங்கண்டுவருந்தல்.

பீடைப்பிணியைவெல்வேளானைக்கோட்டைப்பிறங்கன்முந்நீர் *
ஆடைப்புவிபுரக்கச்சென்றவேந்தரறிகிலரா *
வாடைப்புலியென்னுயிர்தனைவாட்டும்வருத்தமதைப் *
பேடைப்பதச்செவ்வனநடைவாய்ந்திடும்பெண்கொடியே. (சகஉ)

தோழியாற்றுவித்தல்.

பொருந்தாரைவெல்லுங்குகனானைக்கோட்டைப்பொருப்பிலின்பம் *
தருந்தாமமன்னர்தனைத்தேடிவாடித்தளர்ந்துநெஞ்சம் *
வருந்தாதிருபுவனம்பாதுகாத்தின்றுவந்தனர்நன் *
முருந்தானதிலுஞ்சிறந்துமின்வெண்ணகைமொய்த்தமின்னே. (சகங)

காவற்பிரிவுமுற்றிற்று.

## தூதிற்பிரிவு.

தூதிற்குப்பிரிவுதலைமகனுலுணர்ந்ததோழிதலைமகட்குணர்த்தல்.

உலகம்புகழுந்தனைப்பாடுவோருக்குகந்துசெல்வம் *
இலகம்பொனல்குநமசிவாயந்தொழுமேமர்முருகர் *
சலகந்தரவனாமானேசந்தாகத்தயாளமுற்றுக் *
கலகஞ்செய்மன்னரிகன்மாற்றச்சென்றனர்காவலரோ. (சகச)

தலைவிமுன்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

முத்தங்கவிக்கருள்சீரானைக்கோட்டைமுத்தையன்வெற்பில் *
நத்தந்திகழுந்துறைநாடர்முன்பனிநாளினிலென் *
சித்தந்திகைப்புமுடல்விளர்ப்புஞ்சிந்தியாதுபிறர் *
யுத்தந்தவிர்க்கச்சென்றொவர்க்குண்டிந்தயூகமின்னே. (சக௫)

தோழியாற்றுவித்தல்.

நடுக்கந்தருமுன்பனிநாளினெஞ்சநலிந்துநம்பெண் *
இடுக்கம்பெறுமென்றறிந்துவந்தார்கவியென்னுநற்றேன் *

மடுக்குங்குமரர்திருவானைக்கோட்டைவரைக்கண்மன்னர் *
தொடுக்குஞ்சமர்தவிர்ப்பானன்றுசென்றநந்தோன்றல்பொன்னே. (சஅகூ)

தூதிற்பிரிவுமுற்றிற்று.

## துணைவயிற்பிரிவு.

துணைவயிற்பிரிந்தமைதோழிதலைமகட்குணர்த்தல்.

வேண்டுநல்லன்பர்க்குகந்தானைக்கோட்டைநல்வேன்முருகர் *
யாண்டுந்துயர்வந்தணுகாமற்காத்தங்கியங்குதல்போல் *
நீண்டுமின்மைவிழிமானேநம்மன்னவர்நெஞ்சிலன்பு *
பூண்டதந்நேசரிடர்தவிர்ப்பானின்றுபோயினரோ. (சகள)

தலைமகள்பின்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

பின்பனியாற்கதிர்காணுமனெஞ்சிற்பெட்புற்றணங்கும் *
என்பனிப்பைத்தவிர்க்கின்றிலராதனையேத்துமன்பர் *
தன்பனிப்பைத்தவிர்சேயானைக்கோட்டைச்சயிலமதில் *
அன்பனிப்பாருற்றதுன்போட்டச்சென்றவெண்ணண்டகையே. (சகஅ)

தோழியாற்றுவித்தல்.

பொறுமையைக்கொண்டமின்னேதனைப்பாடும்புலவர்கொண்ட *
வறுமையைத்தீர்த்தருள்வேளானைக்கோட்டைவரையிடத்தில் *
நறுமையைக்கொண்டநற்றூர்மன்னர்வந்தனர்நண்பனுற்ற
சிறுமையைத்தீர்த்துன்னிருதனபாரத்தைச்சேர்ந்திடவே. (சககூ)

துணைவயிற்பிரிவுமுற்றிற்று.

## பொருள்வயிற்பிரிவு.

பொருள்வயிற்பிரிவுதலைமகனுணர்ந்ததோழிதலைமகட்குணர்த்தல்.

அண்டமெல்லாந்துதிசேரானைக்கோட்டையயின்முருகர் *
முண்டகப்பாதநினையார்க்கலமிகமூளுதல்போல் *
கண்டகநேர்விழியாய்நமதுள்ளங்கலங்கவைத்துத் *
திண்டிறன்மன்னர்பொருடேடவென்றெண்ணிச்சென்றனரோ. (சஉ0)

தலைவியிளவேனிற்பருவங்கண்டுபுலம்பல்.

பெரு[illegible]பிறைத்தசுழலாய்கவிக்குப்பெருகநிதி *
தருங்குணமன்னனமசிவாயந்தொழுஞ்சாமிவெற்பில் *
கருங்குயிலார்ப்பதுங்கேட்டிலர்மங்கையர்கண்மணங்க *
மருங்குணத்தார்நற்பொருண்மீதிற்காதலைவைத்தவரோ. (சஉக)

தலைவியைத்தோழியாற்றுவித்தல்.

பூமாதுவாழுங்குகனானைக்கோட்டைப்பொருப்பமின்னே *
தேமாவிலுற்றுக்குயின்மாருதங்கிள்ளைத்தேர்ப்பிரியூர் *

கோமான்விழாவந்ததுசேருமென்றெல்லைகூவுதல்கேட் *
டேமாப்படைந்துவந்தார்பொருட்டேடவிரிந்தவரோ. (சஉஉ)

பொருள்வயிற்பிரிவுமுற்றிற்று.

தலைமகன்றலைமகளதுருவுவெளிப்பாடுகண்டுசொல்லியது.

இயலும்பெருகுங்குகனானைக்கோட்டையெழிற்சிலம்பின் *
அயலுங்கடலும்புளினமுமற்றுமடவியெல்லாம் *
புயலும்பிறையுங்குமிழுங்கமலமும்பூகமுத்தும் *
கயலுங்கனியுமிளநீருந்தோன்றுதென்கண்களுக்கே. (சஉஉ)

பாசறைமுற்றிமீண்டூர்வயின்வந்ததலைவன்பாகற்குச்சொல்லியது.

சேவூருமீசர்மகவானைக்கோட்டைநற்சேய்சிலம்பில் *
கோவூர்ந்தபாசறைநீங்கிக்குசைகைக்கொடுவலவா *
பூவூர்விமானத்தெனைமேவச்சொல்லிப்பொருந்தியநீ *
மாவூர்ந்தவாறுநம்மூர்சேர்ந்தவாறுமகிழ்வெனக்கே. (சஉச)

தலைமகளோடிருந்ததலைமகன்கார்ப்பருவங்கண்டுமகிழ்ந்துசொல்லியது.

கொங்கலர்கூந்தற்றிருமாதைச்சேர்ந்தனங்கொங்கைவிம்ம *
மங்கலமானநமசிவாயம்பொன்மலர்க்கரம்போல் *
கொங்கலர்சொலைத்திருவானைக்கோட்டைக்குகனருளால் *
மங்கலமாகப்பொழிந்தென்றும்பொன்முகில்வாழியவே. (சஉரு)

## முற்றிற்று.

---

இஃது

திருநெல்வேலி

முருகதாசசுவாமிகளென்றும்

திருப்புகழ்ச்சுவாமிகளென்றும்

விளங்குகின்ற

## தண்டபாணிசுவாமிகள்

அருளிச்செய்தது.

வெண்பா.

வானைக்காத்தாளும்வடிவேற்பெயர்வாய்ந்தோன் *
ஆனைக்கோட்டைக்குமரர்சுகன்புர்றுத்—தேனைநிகர் *
கோவைத்தமிழுரைத்தான்கொண்டாடிக்கொள்வரின்சொற் *
பாவைத்தநாவார்பலர். *

கட்டளைக்கலித்துறை.

முத்தமிழ்ச்சீர்திகழீழநன்னாட்டின்முதியவுண்மைப் *
பத்தர்கள்வாழுந்திருவானைக்கோட்டைப்பதிக்குகவேள் *
சித்தமகிழவகப்பொருட்கோவைத்தெரியல்செய்தான் *
[illegible]த்துமாம்வடிவேலெனும்பேர்பெற்றுயுஞ்செல்வனே *

